4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்: எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10] மதுரை 26-11-72 ஞாயிறு [மணி 278

## தளவாய்புரம் நெசவாளர் மீது அடியாட்கள் தாக்குதல்

தளவாய்புரம், நவ. 25—
கடந்த ஒரு மாத காலமாக, போனஸ் முதலிய கோரிக்கைகளுக்குப் போராடிக் கொண்டிருக்கும் தளவாய்புரம் நெசவாளர்களை முதலாளிகளின் நூற்றுக் கணக்கான அடியாட்கள் காக்கிக் காயப்படுத்தினர். கல், இருப்புக்கழி, சைக்கிள் செயின் முதலிய ஆயுதங்களால் தாக்கப்பட்டு படுகாயமடைந்த ஸ்தல சி. ஐ. டி. யூ. தலைவர் தோழர் எம். தங்கச்சாமியும் மற்றும் பல தொழிலாளர்களும் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

நேற்று சேத்தூரிலிருந்து தளவாய்புரத்துக்கு ஊர்வலமாக நெசவாளர் வந்துகொண்டிருந்தபோது அடியாட்கள் இத்தாக்குதலை நடத்தினர்.

## மதுரையில் சி. ஆர். பி

மதுரை, நவ. 26—
மதுரைக்கு மத்திய ரிசர்வ் போலீஸ் (சி. ஆர். பி) படை வரவழைக்கப்பட்டுள்ளது. ஏராளமான சி. ஆர். பி. போலீசார் லாரிகளில் ஏறி, முக்கிய வீதிகளில் நேற்று முதல் பவனி வருகின்றனர்.

போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்து நடந்து வரும் மாணவர்களது ஆர்ப்பாட்டத்தை அடக்கவும், இன்று அண்ணா தி. மு. க. வினர் நடத்தும் வாக்காளர் பேரணியைச் சமாளிக்கவும், இந்த சி. ஆர். பி. படையினர் அழைக்கப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

# அச்சுதமேனன் போலீசும் ஆளும் காங்கிரஸ் குண்டர்களும் கேரள மக்கள் மீது தாக்குதல்

## இ. எம். எஸ். கண்டனம்

திருவனந்தபுரம் நவ. 25—
"எந்தவிதமான கட்டுப்பாடும் இல்லாமல், போலீஸ் படையை மக்கள் மீது கட்டவிழ்த்து விட்டிருப்பதின் விளைவாக, எதிர்க்கட்சிகளுக்கு மட்டுமல்லாமல், அமைதியாக வாழவிரும்பும் மக்கள் அனைவருக்குமே நிம்மதியற்ற ஒரு நிலைமையை அச்சுதமேனன் அரசு உருவாக்கியுள்ளது" — என்று தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட், இங்கு நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் கூறினார்.

கேரளத்தில் நடைபெற்று வரும் விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் ஆகியோரின் போராட்டத்தை, போலீஸாரும், ஆளும் கட்சிக் குண்டர்களும் சேர்ந்து தாக்குவதைக் கண்டித்தார்.

**இடதுசாரிக் கட்சிகள்**

இந்தக் கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சோசலிஸ்ட் கட்சி, கிருஷக தொழிலாளர் கட்சி ஆகியவைகளைச் சேர்ந்த தலைவர்களும் பேசினார்கள்.

**கண்டனம்**

தோழர் இ. எம். எஸ். பேசுகையில், "எதையும் செய்வதற்கான லைசென்சை போலீசாருக்கு அரசு கொடுத்ததின் விளைவை, இந்தச் சர்வசாதாரண மக்கள் இன்று அனுபவித்து வருகிறார்கள்.

இந்தக் கொடுமைகளை எதிர்த்து, பொதுமக்கள் ஒன்று திரண்டு எழவேண்டிய காலம் வந்து விட்டது.

பத்தனம் திட்டையிலும், சங்கனச்சேரியிலும் போலீசும், இளைஞர் காங்கிரஸ் குண்டர்களும் சேர்ந்து நடத்திவரும் தாக்குதல்கள், அந்தப் பகுதி மக்களுக்கு பெரும் தொல்லைகளை அளித்துள்ளது. இதனால் வியாபாரிகள் வியாபாரம் செய்ய முடியாமல் உள்ளனர்.

**விஷம் பரவுகிறது**

சி. ஐ. டி. யூ. தலைமையில் உள்ள தொழிற்சங்கங்களைத் தாக்குவதற்காகத்தான் இந்தக் குண்டர்படையை ஆரம்பத்தில் உருவாக்கினர்கள். ஆனால் இதே குண்டர்படையினர் இன்றைய தினம் இதர எல்லாப் பகுதி மக்களையுமே தாக்குகிறார்கள். இந்த நிலைதான் இந்தியா முழுவதும் நிலவுகிறது.

"எங்கெல்லாம் தொழிலாளர்கள் போராடுகிறார்களோ — விலைவாசி உயர்வை எதிர்த்து எங்கெல்லாம் குரல் எழுப்புகிறார்களோ, அங்கெல்லாம் மக்களைத் தாக்குகிறார்கள்" என்று கண்டித்தார்.

## இரவோடிரவாக ஏராளமானோர் கைது

மதுரை, நவ. 24—
மதுரை நகரில் இன்று இரவோடிரவாக ஏராளமானோரைப் போலீசார் கைது செய்துள்ளனர்.

வீடுகளில்வசதியில்லாமல் சாலையோரங்களிலும் கடைகள் முன்பும் படுத்திருந்த வர்களையும் ரோடுகளில் நடந்து சென்றவர்களையும் இன்று நள்ளிரவில் போலீசார் கைது செய்து லாரிகளில் ஏற்றிச் சென்றனர்.

## ரயில்வே ஊழியர் கண்டனம்

மதுரை, நவ. 24—
தங்கள் மீது போலீசார் நடத்திய கண்மூடித்தனமான தாக்குதலைக் கண்டித்துஇன்று மதுரை இரயில்வே ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்தனர்.

இதனால் ஜனதா எக்ஸ்பிரஸ், தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் உட்பட பல இரயில்கள் பல மணி நேரம் தாமதமாக புறப்பட்டன. தட்சிண இரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியன் (சி. ஐ. டி. யூ) இரயில்வே மஸ்தூர் சபா, இரயில்வே எம்ப்ளாயீஸ் சங் ஆகிய சங்கங்களின் கூட்டுக் கூட்டம் இன்று மாலை இங்கு நடந்தது. போலீசாரின் மிருகத்தனமான தாக்குதலுக்குக் கண்டனம் தெரிவித்தது, இத்தாக்குதல்குறித்து தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் இரயில்வே நிலையத்துக்குள் தாக்குதல் நடத்திய போலீஸ் கோஷ்டிக்குப் பொறுப்பாக இருந்த அதிகாரியை சஸ்பெண்ட் செய்யவேண்டும் என்றும், சஸ்பெண்ட் செய்து விசாரணை செய்யாவிடில், இரயில்களை நிறுத்துவது உட்பட பல போராட்டங்கள் நடத்தப்படும் என்றும்அறிவித்துள்ளனர். காயமடைந்த ஊழியர்களுக்கு நிர்வாகம் நஷ்ட ஈடு வழங்க வேண்டும் என்றும் வற்புறுத்தப்பட்டது.

## அடுத்த ஆண்டிலிருந்து சைக்கிள் வரி ரத்து

சென்னை, நவ. 24—
தமிழக முழுதும் சைக்கிள் வரியை ரத்து செய்வதென்று தமிழக அரசுமுடிவு செய்துள்ளது. ஆனால் இந்த முடிவு அடுத்த 1973 மார்ச்சிலிருந்துதான் அமுலாகுமென்று அறிவிக்கப்பட்டது.

# மதுரை நகரில் போலீஸ் வெறியாட்டம்

மதுரை, நவ. 24 —

**பாளையங்கோட்டையில் நடந்த போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்து மதுரையில் இன்று நடந்த மாணவர்களது ஊர்வலத்தின் மீது சிலர் திராவகத்தை ஊற்றினர்.**

**திராவகம் வீசிய அந்தக் கொடியவர்களைக் கைது செய்யக் கோரி ஆர்ப்பாட்டம் செய்த மாணவர்கள் மீதும், பொதுமக்கள் மீதும் போலீஸ்காரர்கள் கண்மூடித்தனமான தடியடிப் பிரயோகம் செய்தனர்.**

மதுரையில் உள்ளகல்லூரி மாணவர்களும் பெருமபாலான உயர்நிலைப்பள்ளி மாணவர்களும், பாளையங்கோட்டையில் போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்தும், துப்பாக்கிச் சூடுகளுக்கு நீதி விசாரணை கோரியும் முழக்கங்களை எழுப்பிக்கொண்டு நகரின் முக்கிய வீதிகள் வழியே ஊர்வலம் வந்தனர்.

**திராவக புட்டி வீச்சு**

பள்ளி மாணவர்களில் ஒரு பகுதியினர் முழக்கம் எழுபபிக்கொண்டு ஊர்வலமாக டவுன் ஹால் ரோடு வழியே வந்து கொண்டிருந்தனர். காலேஜ் ஹவுஸ் ஓட்டல் அருகே ஊர்வலம் வந்து கொண்டிருந்த போது, அந்த ஓட்டலின் மாடியிலிருந்து சிலர் திராவக புட்டிகளையும், சோடா பாட்டில்களையும் மாணவர்கள் மீது வீசினர். இதனால் பல மாணவர்களும், பொதுமக்களும் காயமடைந்தனர்.

எனவே, தங்கள் மீது திராவக புட்டிகளையும், சோடா பாட்டில்களையும் வீசிய அந்தக் கொடியவர்களைக் கைது செய்யும்படி போலீஸ் அதிகாரிகளிடம் வலியுறுத்தினர். காலேஜ் ஹவுஸ் முன்பு நின்று கொண்டு ஆர்ப்பாட்டம் செய்தனர்.

மேலும் மாணவர்கள் மீது சிலர் கற்களை வீசி எறிந்தனர்.

**பேண்டிற்கு ஆபத்து**

போலீசார் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. மாறாக ஆர்ப்பாட்டம்செய்த மாணவர்கள் மீது போலீசார் கண்மூடித்தனமான தடியடிப் பிரயோகம் செய்தனர். விரட்டி விரட்டி அடித்தனர். ரோடுகளில் போலீசார் வருவோர் போவோரையும் மற்றும், அரைக்கால் சட்டை, பேண்ட் அணிந்திருந்த இளைஞர்களையும் அடி அடியென்று அடித்து விரட்டினர்.

போலீசாரின் தாக்குதலை தாக்குப்பிடிக்க முடியாது இளம் மாணவர்கள் அருகில் இருந்த இரயில்வே நிலையத்திற்குள் ஓடி ஒளிந்தனர். அங்கும் போலீசார் விடவில்லை. அதற்குள் நுழைந்து மாணவர்களையும், மற்றும் அங்கு யூனிபாரம் அணிந்து வேலை செய்து கொண்டிருந்த இரயில்வே ஊழியர்களையும். பிளாட்பாரத்திலும், இரயிலிலும் இருந்த பிரயாணிகளையும் அடித்து நொறுக்கினர்.

அதே சமயத்தில் டவுன் ஹால் ரோடு தெப்பக்குளத்தின் வடக்குக் கோடியில் உள்ள ஒரு கடையிலிருந்து தி. மு. க. வினர் என்று கூறப்படும் சிலர் சோடாபாட்டில்களை —ஓடி வந்த பொது மக்கள் மீதும், மாணவர்கள் மீதும் எறிந்தனர்.

**கண்ணாடிச் சிதறல்கள்**

அந்தப் பகுதியில் இருந்த எல்லா கடைகளும் மூடப்பட்டு விட்டன. டவுன் ஹால் ரோடு முழுவதும் ஒரே கண்ணாடிச் சிதறல்களாகவே காட்சியளித்தது.

**தொடர்ந்து தாக்குதல்**

டவுன்ஹால் ரோட்டிலும் அதைச் சுற்றியுள்ள மேலவெளிவீதி, மேலப் பெருமாள் மேஸ்திரி வீதி, திண்டுக்கல் ரோடு ஆகிய பகுதிகளிலும் போவோர் வருவோர் அனைவரையும் — சிறுவர்கள்முதல் பெண்கள் வயோதிகர் வரை — போலீசார் நாலாபுறமும் சூழ்ந்து கொண்டு ஓட ஓட விரட்டியடித்தனர்.

பகல் 12 மணியளவில் மாணவர்கள் கலைந்து சென்றனர். ஆனால் போலீசார் தொடர்ந்து மாலை 6-மணி வரை கடுமையாகதாக்கிக் கொண்டேயிருந்தனர். சைக்கிளில் போகும் நபர்களை விரட்டி விரட்டியடித்தனர்.

கையில் ஏதேனும் புத்தகமோ அல்லது டைரியோ வைத்திருந்தால் போதும், அவர்களை ஓட ஓட போலீசார் விரட்டினர்.

மாணவர்களது ஆர்ப்பாட்டத்தின் காரணமாக காலை 10 மணி முதல் பஸ் போக்குவரத்து அப்படியே ஸ்தம்பித்தது. ஆங்காங்கு கடைகளும், நிறுவனங்களும் அடைக்கப்பட்டன. அரசாங்க, மற்றும் பல்வேறு அலுவலகங்களில் பணியாற்றும் ஊழியர்களும் மற்றவர்களும் அலுவலகங்களுக்கு நடந்தே செல்ல வேண்டியதேற்பட்டது.

**கல்வி நிலையங்கள் மூடப்பட்டன**

இன்றுமுதல் நவ.30முடிய மதுரை மாவட்டத்தில் உள்ளகல்லூரி, பள்ளி உட்பட எல்லா கல்வி நிலையங்களும் மூடப்பட்டன. இதற்கான உத்தரவை மதுரை மாவட்டக் கலெக்டர் பிறப்பித்தார்.

**ஆசிரியர் ஊர்வலம் ஒத்திவைப்பு**

பாளையங்கோட்டையில் கல்லூரிப் பேராசிரியர்

4-ம் பக்கம் பார்க்க

## வண்டிகளை ஓட்ட பி. ஆர். சி. தொழிலாளர் மறுப்பு

மதுரை நவ 24—
போலீசார் நடத்திய தாக்குதலாலும், ரவுடிகள் வீசிய சோடாபாட்டில் வீச்சுக்களாலும் ஆத்திரமுற்ற மாணவர்கள் பி. ஆர். சி. பஸ்கள் மீது கற்களை வீசினர். இதனால் பல பஸ்களின் கண்ணாடிகள் உடைந்தன. இதனால் காலை முதல் எல்லா பஸ்களும் நின்று விட்டன.

தங்களுக்குப் பாதுகாப்பு அளிக்காவிடில் நாளை முதல் பஸ்களை ஓட்டமாட்டோம்என்று பி. ஆர். சி. டிரைவர்களும் கண்டக்டர்களும் அறிவித்துள்ளனர்.

இன்று மாலையில் மத்திய பஸ் ஸ்டாண்டில் கண்டக்டர்கள் டிரைவர்கள் நடத்திய கூட்டத்தில் இந்த முடிவு எடுக்கப்பட்டது.

தொடர்ந்து பி. ஆர். சி. பஸ்கள் ஓடவில்லை.

# மக்களது அன்புத் தலைவன் தோழர்களின் துணைவன்

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) யின் கேரள மாநிலக் குழுவின் செயலாளரும், மத்தியக்கமிட்டி உறுப்பினருமான, தோழர் சி. எச். கணாரன் அகால மரணமடைந்தது அறிந்து, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் மத்தியக் குழு தன்னுடைய ஆழ்ந்த துக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறது.

**அதிர்ச்சி**

கொஞ்சகாலமாகவே அவர் சுகவீனமடைந்திருந்தாலும், தீவிரமாக செயல்பட முடியாதிருந்தாலும், அவர் கட்சிப் பணிகளைத் தொடர்ந்து செய்து வந்தது. அவருடைய நோயின் தீவிரத்தை மறைத்து வந்தது. விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் ஆகியோர், 80 நாட்கள்நீண்ட—தொடர்ந்த போராட்டம் நடத்தியபோது அவருடைய செயல் திறனையும், மதுரையில் நடந்த கட்சியின் 9-வது மாநாட்டில் அவர் பங்கு பெற்றதையும் கண்டவர்களுக்கு அவருடைய மறைவு, அதிர்ச்சியை அளித்துள்ளது.

**மூடநம்பிக்கைக்கு எதிரி**

கீழ் மத்தியதர வகுப்பில் பிறந்த தோழர் கணாரன், மூட நம்பிக்கைகளையும் பத்தாம்பசலி எண்ணங்களையும், ஒழிப்பதில் தீவிரம் காட்டினார்: காங்கிரஸ்கட்சியில் முற்போக்கு கருத்துள்ள உறுப்பினராக, நாற்பது ஆண்டுகளுக்கு முன்பாக தன்னுடைய அரசியல் வாழ்வைத் துவக்கினார். இந்த ஆரம்பம், அவரைப் பின்னாள் காங்கிரஸ், சோசலிஸ்ட் கட்சியின் பாலும், இயற்கையாகவே, ஈர்த்து, கேரள கம்யூனிஸ்ட் கட்சியின் ஆரம்ப உறுப்பினராக ஆக்கியது.

தன்னுடைய சொந்த நகரமான தலைச்சேரியில், தொழிற்சங்க இயக்கத்தில் தீவிரமாகப் பணியாற்றிய அவர் விரைவிலேயே, தொழிலாளி—விவசாயி வர்க்க இயக்கங்களைக் கட்டி வளர்க்கும் உன்னதத் தலைவராக உயர்ந்தார்.

சலியாத அவரது உழைப்பு, வெகுஜன மகளை இயக்கிச் செல்லும் திறன். வர்க்க எதிரியை உறுதியோடு வெறுத்து ஒதுக்கும் திறமை, உட்கட்சிப் பிரச்னைகளை சிக்கலாக்காமல் கையாளும் தன்மை ஆகியவை அவரை மக்கள் இயக்கத்தின்—கம்யூனிஸ்ட் கட்சியின் மதிப்பிற்கும் அன்புக்கும் உரிய தலைவராக ஆக்கியது.

**நிலச்சீர்திருத்தத்தில் பங்கு**

கேரள மாநிலத்தில் விவசாயி இயக்கத்தை வளர்த்ததில் அவருடைய பங்கு குறிப்பிடத் தகுந்தது.

கேரள விவசாயிகள் சங்கத்தின் செயலாளராகவும், பழைய சென்னை மாநில சட்டசபை உறுப்பினராகவும் (1952-56), கேரளத்தில் (1957-59)ம் ஆண்டு சட்டமன்ற உறுப்பினராகவும் பணியாற்றிய அவர் நிலச்சீர்திருத்தச் சட்டத்தை உருவாக்குவதில் பெரும் பங்கு வகித்தார்.

1967-69ம் ஆண்டு ஐக்கிய முன்னணி ஆட்சியின் போது அவர் சட்டசபையில் பங்குபெறாமல் கட்சிப் பணியாற்றிய சமயத்திலும் நிலச்சீர்திருத்தச் சட்டத்திற்கு திருத்தங்களைச்செய்த போதும் சட்டசபைக் கட்சிக்கு துணைவராகவும், ஆலோசகராகவும் பணியாற்றினார்.

**மக்களின் உணர்வை அறிந்தவர்**

அவருடைய அரசியல் வாழ்வு முழுவதும் மக்களின அருகிலேயே கழித்தார். இதனால் கட்சிக்குள் அவர் பல சமயங்களில் கூறிய கருத்துக்கள் கட்சித் தலைமை கூறிய கருத்துக்களுடன் ஒன்றிணைந்ததாக இல்லாவிட்டாலும் மக்களின் உணர்வுகளை அவர் எவ்வளவு தூரம் உணர்ந்திருக்கிறார் என்பதைத் தெளிவாக்குகிறது.

மக்களோடு ஒன்றிணைந்த அவருடைய இந்தப் போக்குத்தான் எந்தவித சமரசத்திற்கும் இடம் தராத போராட்ட வீரராக கட்சிக்குள் நடந்த கருத்துப் போராட்டத்தில் திரிபுவாதிகளைத் தூக்கி எறியும்படியாக அவரைச் செய்தது.

**மத்திய கமிட்டியின் புகழுரை**

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) யாக உருவாக்கப்பட்டபோது மத்திய கமிட்டி விவாதங்களில் மக்களின் உணர்வுகளை புத்துணர்வோடு பிரதிபலிப்பவராகத் திகழ்ந்தார்.

அவருடைய யோசனைகளை மதித்துப் போற்றிய மத்திய கமிட்டிக்கும், உறுப்பினர்களுக்கும், அவரை இழந்தது பெரிய நஷ்டமாகும்.

கட்சியை அமைத்து தூய்மையான மார்க்சிச-லெனினிச சித்தாந்தத்தின் அடிப்படையில் வளர்த்து—ஜனநாயக இயக்கத்தின் எதிரிகளையும், கட்சியின் எதிரிகளையும், கடுமையாகப் போராடி வெற்றி கண்ட அவருடைய செயல் திறனை மத்திய கமிட்டி போற்றுகிறது.

தோழர் கணாரன், கம்யூனிஸ்ட் கட்சியில் உறுப்பினரான நாளிலிருந்து ஏந்திய பதாகையின் கீழ்கட்சி தொடர்ந்து செல்லும் என்று மத்திய கமிட்டி உறுதி கூறுகிறது.

மத்திய கமிட்டி தன்னுடைய ஆழ்ந்த அனுதாபத்தை துயரத்தில் ஆழ்ந்திருக்கும் அன்னாரது குடும்பத்திற்குத் தெரிவித்துக் கொள்கிறது.

சி. எச். கணாரன்

## தோழர் ராமராஜ் தாயார் காலமானார்

தமிழ்நாடு விவசாய சங்கச் செயலாளர் தோழர் ஆர். ராமராஜ் தாயார் இராமு அம்மாள் நவம்பர் 24-ம் தேதியன்று பழனி ஆயக்குடிக்கு அருகிலுள்ள ஒபுளாபுரத்தில் காலமான செய்தியை அறிவிக்க வருந்துகிறோம்.

அன்னாரின் மறைவுக்கு தங்களது ஆழ்ந்த அஞ்சலியைத் தெரிவித்து மார்க்சிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழுவின் சார்பிலும், தீக்கதிரின் சார்பிலும் தந்திகள் அனுப்பப்பட்டன.

# கட்டாக் தொகுதி தேர்தல் கடைசி நேரத்தில் 40 காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் காலைவாரினர்

## நந்தினி சத்பதியை விலக்கக் கோரிக்கை

புவனேஸ்வரம், நவ. 24—
கட்டாக் தொகுதி உப தேர்தலில் வாக்குப் பதிவு நடைபெறவிருக்கும் 44மணி நேரத்துக்கு முன்பாக காங்கிரஸ் கட்சியிலிருந்து 40 எம். எல். ஏக்கள் முதலமைச்சர் பதவிலிருந்து நந்தினிசத்பதியை விலக்க வேண்டும் என்று கோரியுள்ளனர்.

காங்கிரஸ் உறுப்பினர்கள் கூட்டம்ஒரிசா தொழில் அமைச்சர் நீலமணி ரௌத்ரி வீடில் நடைபெற்ற போது இந்த முடிவு எடுக்கப்பட்டது.

ஒரிசா சட்டமன்றத்தில் மொத்தமுள்ள 140 எம். எல். ஏக்களில் 94 எம். எல். ஏக்களின் ஆதரவைப் பெற்று நந்தினி சத்பதி அமைச்சரவை பதவிக்கு வந்தது.

இபபோது 40 எம். எல். ஏ.க்கள் நந்தினி சத்பதி மீது நம்பிக்கையின்மை தெரிவித்து விட்டதால் அவருடைய அமைச்சரவை மைனாரிடி ஆகிவிட்டது.

நந்தினி சத்பதியை விலக்கக் கோரும் 40 எம். எல். ஏ.க்கள் கையெழுத்திட்ட மனு பிரதம மந்திரிக்கும் காங்கிரஸ் தலைவர் எஸ். டி. சர்மாவுக்கும் அனுப்பி வைக்கப்பட்டது,

இந்தச் செய்தியைப் பத்திரிகையாளர்களுக்கு அறிவித்த முக்கியகாங்கிரஸ்தலைவர்களின் ஒருவரான முரளிதர்குமார் மேலும் 15 காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் தங்களுடைய கோரிக்கைக்கு ஆதரவளிப்பதாகவும் தெரிவித்தார்,

**அதிர்ச்சி**

கட்டாக் தொகுதி உப தேர்தலில் ஓட்டு வேட்டையாடுவது முடிவடையும் தருவாயில் 40 காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் நந்தினியை எதிர்ப்பதாக வெளியான அறிக்கை காட்டுத்தீயைப்போல் பரவி காங்கிரஸ் வட்டாரங்களில் பெரிய அதிர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது.

முரளிதர் குமாரின் இந்த அறிக்கை விஷமத்தனமானது அவர் மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் காங்கிரஸ் செயலாளர் சந்திரஜித் யாதவ் அறிவித்தார்,

இந்தக் கட்டத்தில் இந்த அறிவிப்பு வெளியானது நந்தினி வெற்றி வாய்ப்பை பாதிக்கும் என்றும் காங்கிரஸ் கட்சிக்குள் இருந்தே இந்த எதிர்ப்பு உருவாகியிருக்கும்போது இனி ஒன்றும் செய்வதற்கில்லை என்றும் இளந்துருக்கியர் தலைவர் ஒருவர் அறிவித்தார்.

# தீக்கதிர்

## போலீஸ் அராஜகம்

பாளையங்கோட்டையில் மாணவர்கள் மீது தொடுத்த நீசத்தனமான தாக்குதலைத் தொடர்ந்து மதுரையிலும், போடியிலும் இன்னும் தமிழகம் முழுவதும் மாணவர்கள் மீது வஞ்சம் தீர்க்கும் கொடுமைகளை போலீசார் புரிந்து வருகின்றனர்.

பாளையங்கோட்டையில் நடந்த அடக்குமுறையை கண்டித்து மாணவர்களும், ஆசிரியர்களும் ஆர்ப்பாட்டம் செய்வது முற்றிலும் நியாயமானதாகும்.

அங்கு நடந்த அக்ரமத்தை யார்தான் கண்டிக்காமலிருக்க முடியும்?

அங்கு நிதிவிசாரணை நடத்துவதற்கு அரசு முன்வந்ததே எவ்வளவு கொடுமையான—கோரமான நிகழ்ச்சி நடந்துள்ளது என்பதை எடுத்துக் காட்டுகிறது.

இளந்தளிர்களான மாணவர்கள் காவல்துறையின் காட்டுமிராண்டித் தனத்திற்கு ஆளானபோது, அதை ஆட்சேபிக்கும் ஆர்ப்பாட்டங்களை அனுமதிப்பதுதான் முறை. அதற்கு மாருக பல இடங்களில் அவர்களுக்கு ஆத்திர மூட்டிடும் கொடுமைகளையே போலீசார் மேற்கொண்டு வருகின்றனர்.

எடுத்துக்காட்டாக, மதுரையில் மாணவர்கள் அமைதியாக தங்கள் ஆட்சேபனைகளைத் தெரிவித்து ஊர்வலம் நடத்தினர். அந்த ஊர்வலத்தை தடிகொண்டு தாக்கி கலைத்ததுமல்லாமல், கால்சட்டையுடன் தெருவில் செல்லும் அனைவரையும் பிடித்து நவ. 24-ல் போலீசார் சேர்ந்துகொண்டு அடித்துள்ளனர்.

"பேண்ட்" போட்டுக் கொண்டு சைக்கிளில் சென்ற ஒரு பாவமுமறியாத ஒரு வாலிபனைப் போலீசார் பிடித்து இழுத்து கட்டபொம்மன் சிலைக்கு அருகே நடு ரோட்டில் போட்டு கதறக் கதற அடித்துள்ளனர்.

மாணவர் ஊர்வலத்தைக் கலைப்பதாகச் சொல்லிக் கொண்டு மதுரை ரயில்வே ஸ்டேசனுக்குள் நுழைந்து அங்கிருந்த ரயில்வே ஊழியர்களை நீசத்தனமாகத் தாக்கியுள்ளனர். இருவரது மண்டைகள் உடைக்கப்பட்டுள்ளன. இதனால் ரயில்வே ஊழியர்கள் கண்டன வேலைநிறுத்தம் செய்தனர். மாணவர்கள் ஊர்வலம் நடத்தியபோது சிலர் 'ஆசிட்' பல்புகளை அவர்கள்மீது வீசி, நாசம் விளைவித்துள்ளனர். இதற்குப் போலீசாரும் உடந்தை.

ஆசிட் பல்புகளின் தாக்குதலுக்கு உள்ளான மாணவர்களிடையே ஆவேசம் பொங்கி வழிந்ததில் ஆச்சர்யமில்லை.

சட்டத்தையும், ஒழுங்கையும் நிலைநாட்டுவதாசக் கூறிக்கொண்டு காவல் துறையின் காட்டு மிராண்டித் தனத்தைக் கட்டவிழ்த்துவிட்டுள்ளது தி. மு. க. ஆட்சி. இந்த நிலைமை உடனே தடுத்து நிறுத்தப்படாவிட்டால்—போலீஸ் வெறியாட்டத்திற்கு உடனடி முற்றுப் புள்ளி வைக்கப்படாவிட்டால், தமிழகமெங்கும் மக்கள் சீறியெழுவார்கள் என எச்சரிக்கின்றோம்.

ஆர்ப்பாட்டங்கள், ஊர்வலங்கள், ஆட்சேபக் கூட்டங்கள் நடத்துவது சட்டவிரோதமல்ல; ஜனநாயக உரிமை சட்டத்தையும் அமைதியையும் துப்பாக்கி முனையிலும், போலீஸ் தடியடி மூலமும் நிலை நாட்டிவிட முடியும் என நினைத்தால் "யானை தன்தலையிலே மண்ணைவாரிப்போட்டுக் கொண்டது போல" முடியும். வேறு யாரும் தி. மு. க. ஆட்சியைக் கவிழ்க்க முன்வர வேண்டியதில்லை- இன்று கட்டவிழ்த்து விடப்பட்டுள்ள போலீசின் வெறிச்செயல்களே, காட்டுமிராண்டித்தனமே, அராஜகமே இந்த ஆட்சிக்கு ஒரு முடிவு கட்டும் நிலையை உருவாக்கும் என எச்சரிக்கிறோம்.

## பாளையங்கோட்டை சம்பவம் ஆசிரியர் கண்டனம்

மதுரை நவ 24—

மதுரை மாவட்ட பட்டதாரிஆசிரியர்சங்கபொதுச் செயலாளர் திரு ஆர்.வெங்கட்ராமன் கீழ்வரும அறிக்கையினை வெளியிட்டுள்ளார்.

பாளையங்கோட்டையில் ஒரு பேராசிரியர் மிக மோசமாக போலீசாரால் தாக்கப்பட்டார். போடியில் ஒரு உதவித் தலைமை ஆசிரியர் ஒருநாள் இரவு முழுவதும் போலீஸ் காவலில் வைக்கப்பட்டார். இதைக் கண்டித்து ஊர்வலம் சென்ற மாணவத் தோழன் திரு. டி. எஸ். லூர்துசாமிநாதன் பிணமாக்கப்பட்டார்.

போடியில் துப்பாக்கிச் சூட்டில் ஆறு பேர் படுகாயமடைந்துள்ளனர். ஆசிரியர் சமுதாயம் முழுவதற்கும் ஏற்படுத்தப்பட்டுள்ள களங்கத்தைக் கண்டித்து ஆசிரியர் சமுதாயம் முழுவதும் பொங்கி எழுந்துள்ளது. இந்த அடக்குமுறையை உடனடியாக நிறுத்தி, இதற்கு காரணமானவர்கள் மீது தக்க நடவடிக்கை எடுக்க அரசினை மதுரை மாவட்டப் பட்டதாரி ஆசிரியர் கழகம் வலியுறுத்திக் கேட்டுக் கொள்கிறது.

இந்தத் துயர நிகழ்ச்சிகளுக்கு முதல்வர் உடனடியாக வருத்தம் தெரிவிக்காமல் இருப்பதையும் வன்மையாகக் கண்டிக்கிற

## சைகோனில் விடுதலை வீரர்கள் திடீர்த் தாக்குதல்

ஹனோய், நவ. 23—

விடுதலைப்படைகள் சைகோன் நகரின் மீது திடீர்த் தாக்குதல்கள் தொடுத்துக் கொண்டிருக்கின்றன.

விடுதலைப்படை வீரர்கள் கடந்த ஒருவார காலமாக திடீர், திடீரென்று தாக்குதல் தொடுப்பதால் கூலிப் படைகள் அவைகளின் ஆவேசமான தாக்குதல்களை தாக்குப்பிடிக்க முடியாமல் திணறிக் கொண்டிருக்கின்றனர்.

டாஙை பகுதியில் விடுதலை வீரர்கள் மும்முரமாக தாக்குதல் தொடுத்துக் கொண்டிருக்கின்றனர். பிளேக்கு பகுதியிலும் கடும் சண்டை நடந்துகொண்டிருக்கிறது. சைகோனின் வடக்கெல்லைப் பகுதியில் விடுதலைப் படைகள் மறைந்திருப்பதாக சந்தேகப்பட்ட பகுதிகளிலெல்லாம் பி. 52 விமானங்கள் குண்டுமாரி பொழிந்து கொண்டிருக்கின்றன.

கூலிப்படைகளின் தலைநகரிலே விடுதலைவீரர்கள் புகுந்து தாக்குதல்தொடுக்க ஆரம்பித்து விட்டதால் கூலிப் படையினர் பெரும் திகிலடைந்திருக்கின்றனர்.

## மராட்டியத்தில் 35 எம்.எல்.ஏ. க்கள் சஸ்பெண்ட்

நாக்பூர், நவ. 24—

சட்டசபைக்குள் போலீசார் புகுந்து என். டி. பட்டீல் என்ற ஒரு உறுப்பினரைத் தாக்கியதின் விளைவாக எல்லா எதிர்க்கட்சியினரும் முதலமைச்சர் வி. பி. நாயக்கை பேசவிடாமல் தடுத்தனர். என். டி. பட்டீலை தாக்கியதற்காக மன்னிப்புகோருப்படி வலியுறுத்தினா.

எதிர்க்கட்சி உறுப்பினர்களின் கோரிக்கைகளை சபாநாயகர்மறுத்ததால் ஏழு தொழிலாள — விவசாய கட்சி உறுப்பினர்கள், இரு சோசலிஸ்ட்கட்சி உறுப்பினர்கள், இரு வலது கம்யூ. உறுப்பினர்கள், ஒரு மார்க்சிஸ்ட் உபிப்பினர்உட்பட35 சட்டமன்ற உறுப்பினர்களை சபாநாயகர் இரண்டு நாள் நீக்கிவைத்தார்.

## டில்லி மாணவர் கைது

புதுடில்லி, நவ. 23—

டில்லி எஞ்சினியரிங் கல்லூரி மாணவர்கள் 59 பேர் நாடாளுமன்ற கட்டிடத்தின் அருகே கைது செய்யப்பட்டனர்.

மூடப்பட்ட கல்லூரியைத் திறக்கக் கோரியும் கைது செய்யப்பட்ட மாணவர்களை விடுதலை செய்யக் கோரியும் ஆர்ப்பாட்டம் செய்ததற்காக அவர்கள் கைது செய்யப்பட்டனர்.

## நீதிவிசாரணைக்கு உத்தரவு

சென்னை, நவ. 24—

பாளையங்கோட்டையில் சென்ற 21-ம் தேதியன்று நடைபெற்ற போலீஸ் வனமுறையின்போது, லூர்துநாதன் என்ற மாணவன இறந்துவிட்ட சம்பவம் குறித்து நீதிவிசாரனை நடத்துவதற்கு தமிழ்நாடு அரசு உத்திரவிட்டுள்ளது.

மாவட்ட நீதிபதி அந்தஸ்திலுள்ள அதிகாரி ஒருவர் இந்த நீதிவிசாரணையை நடத்துவார்.

## சாப்பாட்டிற்கு அரிசி கொண்டுபோக தடை

### மார்க்சிஸ்ட் கட்சி கண்டனம்

பெரியகுளம், நவ. 24—

பெரியகுளம் தாலுகா சாத்தா கோவில்பட்டியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தைக் கலைக்க சில ரௌடிகள் கல்லெறிந்த முயற்சி முறியடிக்கபட்டு கூட்டம் அமைதியாக நடைபெற்றது.

தோழர் ஆர். இராமானுஜம் தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் ஆர். சுப்பையா பி. ஏ. பி. எல்., பி. கே. முத்துச்சாமி, செங்குட்டுவன் பி. ஏ., வி. துரைராசு, பி. அப்துல் ரகிமான், ஆர் பால்சாமி ஆகியோர் பேசினர்.

தி. மு. க., அ. தி. மு. க. கட்சிகளின் நிலை குறித்தும், லஞ்சஊழலைப் பற்றியும் விரிவாகப்பேசினர்கள். தானியத் தடுப்பு சாவடியின் பெயரால் ஏழை மக்கள் தங்களின் அன்றுட தேவைகளுக்காக கொண்டுவரும் 2படி, 3படி அரிசியைக்கூட பறிமுதல் செய்கிருர்கள்.

## பசியில் விவசாயி குடும்பம் பலி

சிரமேபூர். நவ. 22—

வஞ்சோலி கிராமத்தில் 4 போ அடங்கிய விவசாயி குடும்பம் ஒன்று சென்ற வாரத்தில் உணவு கிடைக்காமல்பட்டினியால் இறந்துவிட்டது.

இத்தகவலை அகமத்நகர் மாவட்டக் குழு உபதலைவர் யஷ்வந்திராவ் காடா அறிவித்துள்ளார்.

## ஆமதாபாத்தில் போனஸ் திட்டம்

ஆமதாபாத், நவ. 22—

"எல்லோருக்கும் போனஸ்" தினமாக வரும் வெள்ளிக்கிழமை அரசு ஊழியர்களால் அனுஷ்டிக்கப்படும்.

நவ. 28ம் தேதி இந்தக் கோரிக்கைக்காக நடைபெறும் ஊர்வலத்தில் மத்திய, மாநில அரசு ஊழியர்களும், ஸ்தலஸ்தாபனஊழியரும கலந்துகொளளுவார்கள் என்று மத்திய அரசு ஊழியர் சங்க செயலாளர் பி. எஸ். ராஷ்டிரபால் அறிவித்துள்ளார்.

## வருந்துகிறோம்

நாகை தாலுக்கா ஆந்தக்குடி கிளை செயலாளர் தோழர் பி குஞ்சுநோய்வாய்பட்டு20-11-72திங்கள் காலை 8மணிக்குகாலமானர். அன்னரின் சவஅடக்கம் அவர் சொந்த ஊர் கடலா குடியில்22-11-72மாலை2மணிக்கு நடைபெற்றது. அன்னரின் இறுதி யாத்திரையில 1000க்கும் அதிகமான ஆண்களும், பெண்களுமகலந்துகொண்டனர்.

அன்னரின் சிதைக்கு தீ மூட்டியபின், மயானத்தில் நடந்தஇரங்கற்கூட்டத்துக்கு, நாகைததாலுகா வி. ச. தலைவர் தோழர் பி. நாகராஜன் தலைமைதாங்கினர். அக்கூட்டத்தில் தோழர் கே. சின்னப்பா, எஸ். தங்கராஜ், வி. தம்புசாமி, வவது கம்யூனிஸ்ட்டு கட்சியின் சார்பில தோழர் வி.காத்தபெருமாள், தாலுக்காகட்சிசெயலாளர்தோழர் கே.இடும்பையன்ஆகியோர் மறைந்த தோழரின தியாக வரலாறு குறித்தும், கடந்த 25 வருட காலம தாலுக்கா விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் இயக்கத்திற்கு அவர்ஆற்றிய நற்பணிகள் குறித்தும, பேசினர். கடைசியில் அவர் குடும்ப பாதுகாப்பு நிதி திரட்டப்பட்டது. பல்வேறு கிளைகளின் சார்பில் திரட்டப்பட்டது; அந்த நிதியை அன்னரின் மனைவியிடம் தாலுகா செயலாளர் தோழர் கே. இடும்பையன் கொடுத்து ஆறுதல் கூறினர்.

## தேனித் தொழிலாளிக்கு ரூ10 ஆயிரம் நஷ்டஈடு

தேனி, நவ. 26—

தேனியில் வேலைநீக்கம் செய்யப்பட்ட மா பாண்டியன் என்ற தொழிலாளிக்கு சி. ஐ. டி யூ. தலைமையில இணைந்துள்ள பொதுத் தொழிலாளர் சங்கத்தின் மூலம ரூ 10 ஆயிரம் நஷ்டஈடு வாங்கிக் கொடுக்கப்பட்டது.

மா.பாண்டியன் என்பவர், தேனியில் வசிக்கும் ஜோசப் துரைராஜ் என்பவரிடம் கடந்த 12 ஆண்டுகாலமாக வேலை பார்த்துவந்தவர்.

பாண்டியன் சிவப்பு சட்டை அணிந்ததற்காக "நக்சலபாரி" என பட்டம் சூட்டி கடந்த 15-ம தேதியன்று போலீசார் கைது செய்தனர்.

பிறகு மார்க்சிஸ்ட் கட்சியின் நடவடிக்கையினுல அவர் விடுவிக்கப்பட்டார். (இச் செய்தி. 22. 11. 72-ம் தேதிய தீக்கதிரில் வெளிவந்திருப்பது நினைவிருக்கலாம.)

இதைத் தொடர்ந்து எவ்விதக் குற்றமும் இல்லாத பாண்டியன் மீது ஜோசப்துரைராஜ் சந்தேகம் கொண்டு அவரை அநியாயமாக வேலை நீக்கம செய்துவிட்டார்.

இந்தப் பிரச்னையில் சி. ஐ. டி. யூ தலைமையிலான பெரியகுளம் - உத்தமபாளையம் தாலுகா பொதுத் தொழிலாளர் சங்கம் தலையிட்டது. 23-ம் தேதியன்று பேச்சுவார்த்தை நடைபெற்றது.

பேச்சு வார்த்தையின் முடிவில தொழிலாளி மா. பாண்டியனுக்கு ரூ. 10 ஆயிரம நஷ்ட ஈடு கொடுக்க ஜோசப் துரைராஜ் ஒப்புக்கொண்டார். அப்போதே நஷ்ட ஈட்டுப் பணமும் வாங்கப்பட்டது.

பேச்சு வார்த்தையில், தொழிற்சங்க சார்பாக தோழர்கள் எஸ். ஏ. ரஜாக், பி. உசேன்மீர், கே. ராஜப்பன், வி. பொன்னையா, தி. கோபாலன் ஆகியோர் கலந்துகொண்டனர்.




## சீனி வினியோகத்தில் தில்லுமுல்லு

ஐயா,

ஆண்டிப்பட்டி வட்டாரத்தில் பல இடங்களில் சீனி வினியோகக் கடைகளில் சீனி கொடுக்கப்படவில்லை. வேறு சில இடங்களில் முக்கால் கிலோவாகக் குறைத்து வினியோகிக்கப்படுகிறது.

இந்தக் கடைகளுக்கு வரும் சீனி கள்ளமார்க்கெட்டுக்குப் போகிறது.

இதற்கு அவர்கள் கூறும் காரணம் சீனி வினியோக உரிமைபெற ரூபாய் ஆயிரம் வரை செலவு செய்ய வேண்டியிருப்பதால் அந்தச் செலவை ஈடுகட்டவேண்டியிருக்கிறது என்பதேயாகும்.

மேலும் கிராம உத்தியோகஸ்தர்கள், பஞ்சாயத்து உறுப்பினர்கள் போன்ரேருக்கு ஆளுக்கு நாலு கிலோ முதல் பத்து கிலோ வரை கொடுக்க வேண்டியிருக்கிறது என்றும் கூறப்படுகிறது.

இந்த நிலைமையைவிளக்கி மக்களுக்கு முறையாக சீனி வினியோகிககுமாறு கேட்டு கலெக்டருக்கும், துணைக் கலெக்டருக்கும் அனுப்பப்பட்ட மனுக்கள் மீது எந்த நடவடிக்கையும் எடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை.

இப்படிக்கு,

கோ. மணிவேல்
வரதராஜபுரம்.

# மேற்கு வங்கத்தில் காளி பூஜை காங். ரவுடிகளின் பூஜையாயிற்று

கல்கத்தா, நவ. 24—

**மேற்குவங்கத்தில் காளி பூஜை கோலாகலமாக கொண்டாடப்பட்டது. இந்திரா காங்கிரஸ் ரௌடிகளும், குண்டர் கும்பலும் அன்று செல்வச் செழிப்பில் மிதந்தனர். ஆனல் சாதாரண ஏழை எளிய மக்களோ அன்று கண்ணீர்க் கடலில் மூழ்கினர். மாநிலமெங்கும் துப்பாக்கி முனையில் ரௌடிகள் காளிபூஜை நன்கொடை என்ற பெயரில் ஏராளமான பணத்தை வசூலித்தனர்.**

**நன்கொடைகள் பலவந்தமாக இவ்வாறு வசூலிக்கப்பட்ட செய்திகளை மறைக்க முடியாமல் இந்திரா காங்கிரஸ் ஆதரவு பத்திரிகைகளான 'ஜுகாந்தர்', 'ஆனந்த பஜார் பத்திரிக்கா' போன்ற பத்திரிகைகளே செய்திகளை வெளியிட்டு, கண்டனம் செய்துள்ளன. அதன் விபரம் வருமாறு:—**

மேற்கு வங்க முதலமைச்சர் திரு. சித்தார்த்தசங்கர் ரேயும், ஏனைய காங்கிரஸ் தலைவர்களும் தங்களது பக்தர்கள் நடத்தியகாளிபூஜை துவங்குவதில்விறுவிறுப்பாக இங்குமங்கும் அலைந்து கொண்டிருந்தனர். கிழக்குப் பகுதி ஜி. ஓ. சி. பட்டாளம் கூட இதில் சுறுசுறுப்புக் காட்டியது.

கிழக்கு கல்கத்தாவிலுள்ள பணிக்காலாமெயின் ரோடில் உள்ள குடியிருப்புகளில கூட்டமாக இளைஞர்கள் புகுததனர்.

ஏதாவது ஒரு நிலப்பிரவு அல்லது குடியிருப்போரின் முகவரியைக் குறிப்பிட்ட ரசீதுகளை அப்பகுதியில் வாழும மக்களிடம் அளித்தனர். அந்த ரசீதில் ஒரு பெரும் தொகையை நன்கொடை என்ற பெயரில் குறிப்பிட்ட முகவரிக்கு அனுப்பிவிடவேண்டும். அப்படி யாரவதுஅனுப்பத்தவறினல் அவரது உயிருக்கே ஆபத்து நேரிடும் என்று பயமுறுத்தி விட்டுச் சென் சென்றனர். இத்தகவல் 'ஜுகாந்தர்' பத்திரிகையின் நவம்பர் முதல் தேசிய இதழில் வெளிவந்துள்ளது

வடக்கு கல்கத்தா பகுதியில் உள்ள கிரே தெருவில் கைத்துப்பாக்கி முனையில் காளிபூஜைக்கு என்று நன்கொடை வசூலிக்கப்பட்டன என்ற செய்தி'பசுமதி' என்ற வங்க நாளேட்டின் அக் 31ம் தேதி இதழில் வெளிவந்துள்ளது.

பர்தலாவில் இதுபோன்று பலவந்தமாக வசூலிக்கப்படும் நன்கொடைகளை அளிக்க முடியாது என்று மறுத்த மாநகராட்சிஊழியர் ஒருவர் தாக்கப்பட்ட செய்தியை 'ஆனந்த பஜார் பத்திரிக்கா' தனது அக்டோபர் 28ந் தேதி இதழில் வெளியிட்டிருந்தது

### 24 பர்கானவில்

24 பர்கானுமாவட்டத்தின் தெற்குப் பகுதியில் உள்ள சோனும்பூரில் உள்ளூர் கோஷ்டிகள் பேட்டிபோட்டுக் கொண்டு ஆடம்பரமாக காளிபூஜையைக் கொண்டாட முனைந்தனர். இதனல் இருகோஷ்டிகளும் போட்டி போட்டுக்கொண்டு மேலும் மேலும் அதிகமானதொகைகளை நன்கொடையாக வசூலிக்க ஆரம்பித்துவிட்டனர்.

இவர்கள் போட்டியின் இடையில் சிக்கியவர்கள் சாதாரண ஏழை மக்களும், சிறுகடைக்காரர்களும்தான் இவர்களில் யாராவது இவ்வளவு அதிகமான நன்கொடையை கொடுக்க இயலாத தங்களின நிலையை கெஞ்சிக் கூத்தாடி எடுத்துரைத்தாலும கேட்பதில்லை மாருக, அவர்களிடமிருந்து எச்சரிக்கைதான்வருகிறது. நீங்கள் குறிப்பிட்ட இத்தொகையை நன்கொடையாகத் தராவிடில் மார்க்சிஸ்ட கட்சியினரைப்போல் நீங்களும் இப்பகுதியிலிருந்தே வெளியேற்றப்படுவீர்கள் என்று பலமாக எச்சரிக்கப்படுகிருர்கள்.

### துப்பாக்கி முனையில் நன்கொடை

கல்கத்தாவின் தென் பகுதியிலுள்ள டாலிகஞ்சில் நேற்று வரை இந்திராகாந்தி வாழ்க! வாழ்க! என்று கோஷம் போட்ட அதே குமபல்தான் இன்றைக்கு காளிபூஜையின் பெயரால் நன்கொடைகளை வசூலித்துக் கொண்டிருக்கின்றன. இப்பணத்தை வசூல் செய்யும போது இக்கும்பல்களால்சூழல் துப்பாக்கிகள், கைத்துப்பாக்கிகள், வெடிகுண்டுகள் கொண்டு வெளிப்படையாக சிறிதும் அச்சமின்றி பயன்படுத்தி மக்களை பீதியடையச் செய்தனர்.

எதற்கும் அஞ்சாத இந்த காலிகள் நன்கொடை வசூலிக்கும் போது அவர்களால் கொடுக்கமுடியுமா? முடியாதா? என்றுகூடக் கேட்டதில்லை. சொத்துக்களை அடமானம் வைத்தோ, எங்காவது கடன் வாங்கியோநாங்கள் கேட்கும் தொகையைத் தரவேண்டும் என்று மிரட்டிப் பிடுங்கினர்.

### ரௌடிகளின் வளர்ச்சி

ஆம்! மேற்கு வங்கத்தில் காங்கிரஸ் மோசடித் தேர்தலை நடத்திய ரௌடிக் கும்பல்களும், கொலைகாரக் குண்டர் கும்பலும்தற்போது மேலும் ஒருபடி சென்றுள்ளனர்.ஏதாவது ஒருபெயரைச் சொல்லி பணம் வசூலிப்போம் தரமறுத்தால்உங்கள் உயிரும் உடைமையும் எங்களுக்குச் சொந்தம் என்று கேட்கும் நிலைக்குச் சென்ளனர்.

### நள்ளிரவில் புகுந்து கலாட்டா

பரக்பூரிலுள்ள நேளவேபரா பகுதியில் அக்டோபர் 31ம்தேதியன்று நள்ளிரவில் குண்டர் கும்பல் சுழல் துப்பாக்கிகளுடன் புகுந்துகாளி பூஜை விழா கொண்டாட வேண்டுமென்று ஒருபெருந் தொகையை அனைவரிடமும் கேட்டுக்கொண்டிருந்தது.

பின் கால் ரோடிலுள்ள ஒரு வீட்டினுள் குண்டர் கும்பல் புகுந்தது. அந்த வீட்

(4-ம் பக்கம் பார்க்க)

## அடக்குமுறைக்கு கண்டனம்

### ஒரு மைல் நீள ஊர்வலம்

கோவில்பட்டி, நவ. 23—

நெல்லையில் நடந்த போலீஸ் அடக்குமுறையை கண்டித்தும், உயிர்நீத்த மாணவருக்கு அனுதாபம் தெரிவித்தும இங்கு இன்று ஒருமைல்நீள மாணவர்ஊர்வலம் நடைபெற்றது.

ஏராளமான மாணவர்களும் இதில் கலந்துகொண்டனர்.

இன்று காலை 11 மணிக்கு ரயில்வே கிராசிங்கில் ஆரம்பித்த ஊர்வலம லட்சுமி மில் கேட்டைபிற்பகல் 2மணிக்கு வந்துசேர்நதது.

### திண்டுக்கல்

இங்கு ஜி. டி. என். கல்லூரி மாணவர்களும், மற்ற மாணவர்களும் கண்டன ஊர்வலம் நடத்தினர். இறுதியில் பாரதி மைதானத்தில் நடந்த கூட்டத்தில் மாணவர்கள் நாகராஜன், ராமமூர்த்தி பேசினர். கல்லூரி முதல்வர், பேராசிரியர்கள் நடத்திய கூட்டத்தில் பாளையங்கோட்டை சம்பவத்திற்கு கண்டனம் தெரிவிக்கப்பட்டது.

நகரில் உள்ள கல்விநிலையங்கள் அனைத்தும் மூடப்பட்டன.

மற்றும், பழனி, சோழவந்தான், கரட்டிப்பட்டி, வத்தலக்குண்டு, பெரியகுளம் முதலிய பல இடங்களில் மாணவர் ஆர்ப்பாட்டங்கள் நடந்தன.

### சாத்தூரில்

சாத்தூரில் எஸ். ஆர். நாயுடு கல்லூரி மாணவர்களும், எடவர்டு உயர்நிலைப்பள்ளி, ஏ. வி. உயர்நிலைபபள்ளி மாணவர்களும மௌன ஊர்வலங்கள் நடத்தினர். இதனல் கல்வி நிலையங்கள் மூடப்பட்டன.

ஸ்ரீவில்லிபுத்தூரில் இந்து உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் சுமார் 2000 பேர் நகர வீதிகளில் வழியே ஊர்வலம் வந்தனர். போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்தும், டி. எம். எஸ். பள்ளியருகே உள்ள கள்ளுக்கடையை மூடும்படியும், பள்ளி மாணவர் தலைவர் தேர்தலை விரைவில்நடத்தும்படியும் சீருடை அணியும் விதியைத் தளர்த்தும்படியும், மாணவர்கள் கோரினர். இதனல் கல்வி நிலையங்கள் ஞாயிறு முதல் மூடப்படடன.

### சங்கரன்கோவில்

இங்கு நேற்று காலை கல்லூரி மாணவர்களும், பள்ளி மாணவர்களும் வேலை நிறுத்தம் செய்து கண்டன ஊர்வலம் நடத்தினர்.

மாலையில் கல்லூரி பேராசிரியர்கள், உயர்நிலை-தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள் ஆகியோர் கண்டன ஊர்வலம் நடத்தினர். இறுதியில் சுவாமி சன்னதியில் ஆசிரியர் அய்யாப்பிள்ளை தலைமையில் பொதுக்கூட்டம்நடந்தது. போலீஸ் அடக்கு முறையைக் கண்டித்து பல ஆசிரியர்கள் பேசினர்.

## கேரளத்தில் அரிசி தட்டுப்பாடு கெட்டுப்போன அரிசியைவிற்று வியாபாரிகள் கொள்ளை

திருவனந்தபுரம், நவ. 22—

உண்ணுவதற்குலாயக்கற்ற கெட்டுப்போன அரிசி ஆந்திரத்திலிருந்து கேரளத்துக்கு கொண்டுவந்து விற்கப்படுகிறது. இந்த மாதிரி அரிசி 10 ஆயிரம் டன் கேரளத்தில் வெளிமார்க்கெட்டில் விற்பனையாகிக் கொண்டிருக்கிறது.

ஆந்திர மில் சொந்தக்காரர்களிடமிருந்து உணவுக் கார்ப்பரேஷன் இந்த அரிசியை வாங்க மறுத்த பின்னர் கேரள அரிசி வியாபாரிகள் இந்த அரிசியை வாங்குவதற்கு கேரள அரசு அனுமதி வழங்கியுள்ளது.

இந்த அனுமதியைப் பெற்று வாங்கிவந்திருக்கும் அரிசியை வியாபாரிகள் குவிண்டால் ரூ. 150 விலைக்கு விற்கிருர்கள். நல்ல அரிசிக்கு உணவுக் கார்பபரேஷன் குவிண்டாலுக்கு ரூ. 75 தான் விலை வைத்திருக்கிறது.

## புதிய உள்ளங்களைக் கவர்ந்திடும்
# மார்க்சிஸ்ட் இயக்கம்

[நமது சிறப்புச் செய்தியாளர்]

கோவை, நவ. 23— கோவை வடக்கு பிரதேச குழுவின் முன் முயற்சியில் உடையாம்பாளையத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழுவின் கூட்டம் சிறப்பான முறையில் நடப்பதற்கான எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன.

கோவை நகரத்திலிருந்து சுமார் 5மைல்தூரத்தில்இருக்கிறதுஇந்தகிராமம்.கோவை மாவட்டச் செயலாளர் தோழர் வெங்கிடு அவர்களின் இல்லத்தில்தான் இந்தக் கூட்டம் நடைபெற்றது. தங்கள் வீட்டிற்கு வருகை தந்த தலைவர்களை வரவேற்று உபசரிப்பதில் எவ்வளவு உற்சாகம்! வெங்கிடு குடும்பத்தாரும், கோவை வடக்குப் பிரதேசத் தோழர்களும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தமிழ் மாநிலத் தலைவர்களை வரவேற்று உபசரிப்பதை தங்களது வாழ்க்கையில் மறக்க முடியாத ஒரு நிகழ்ச்சியாகவே கருதினர். இரவு பகல் ஓய்வின்றி உழைத்தனர். கூட்டம் நடைபெற்ற 6 நாட்களும், அது வெற்றிகரமாக நடந்து முடிய தோழர்கள் ஆற்றிய பணிகள் கட்சியின்பால் அவர்கள் கொண்டிருக்கும் ஆழ்ந்த ஈடுபாட்டினையே கோடிட்டுக் காட்டின. நன்கொடை வசூல் செய்து நல்ல முறையில் உணவு வழங்கி வந்திருந்த தோழர்களுக்கு அவர்கள் ஆற்றிய பணி விடைகள் மறக்க முடியாத நிகழ்ச்சிகள். அதே சமயத்தில் சுற்று வட்டாரத்தில் பல பொதுக்கூட்டங்கள் நடத்தும் ஏற்பாடுகளும் நடைபெற்றன.

### இளந்தோழர்கள்

கோவை வடக்குப் பிராந்தியத்தைச் சேர்ந்த, இந்தத் தோழர்கள் பெரும்பாலும் 30 வயதுக்குட்பட்டவர்கள். வயது முதிர்ந்த தோழர்கள் ஒரு சிலரேயாவர். "இவர்களைப்பற்றியெல்லாம் புகழ்ந்து எழுதி தலைக்கேறும்படி செய்து விடாதீர்கள்" என எச்சரிக்கிறார் மாவட்டச் செயலாளர்.

"நாங்கள் கட்சிக்குவந்து பத்தாண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது, தோழரே! நம்ம கட்சியிலே ஊறிப் போய் விட்டோம்; எந்தப் பித்தமும் இனி எங்க தலைக்கேறாது, பயப்படவேண்டாம்" என நகைச்சுவையோடு மாவட்டச் செயலாளருக்குப் பதில் கூறுகிறார் ஒரு தோழர்.

அவருக்கு வயது 24க்கு மேல் இருக்காது. கட்சியில் அவருக்கு 10 வருட அனுபவமென்றால், அவருக்கு 14 வயது ஆவதற்கு முன்பிருந்தே கம்யூனிஸ்ட் இயக்கத்தால் ஈர்க்கப்பட்டார் என்று பொருள்.

### கட்சிக்காக வேலை

அவரும், அவருடனிருந்த தோழர்களும் அருகாமையிலுள்ள மில்களிலும், என்ஜினியரிங் பட்டறைகளிலும் பணியாற்றுகின்றனர். அவர் கூறுகிறார்:—

"தோழரே! எனக்குநேரம் போதவில்லை. நான் ஒரு மாதத்தில் 5 நாட்கள் அல்லது ஒரு வாரம் கூட லீவு எடுத்துக்கொண்டு கட்சிக்காக வேலை செய்கிறேன். நல்ல வேளையாக எனது மனைவியும் தொழிற்சாலையில் வேலை செய்வதால் எனக்கு இதனால்பாதிப்பு இல்லை. எப்படியாவது நமது கட்சியை வெற்றியடையச் செய்து விட வேண்டும் என்பதிலேதானும், கோவை வடக்கு ஏரியாத் தோழர்களும் தீவிரமாக வேலை செய்ரோம்" என்றார்.

"தொழிற்சங்க வேலைகள் தானே, உங்களது முக்கியமான வேலை" என்று கேட்டேன். "அந்த வேலை வெகு சுலபமானது; எல்லாத் தொழிலாளர்களும் அதைச் செய்வார்கள். ஆனால் மற்றொரு முக்கியமான வேலையில் நாங்கள் இறங்கி இருக்கிறோம் என்றார்"

"என்ன அது" என்று கேட்டதற்கு, "விவசாய சங்க தலைவர்கள் இருக்கிறார்களே, அதுதான் பழைய கோட்டைபட்டக்காரர் வகையரு, அவுங்க, கிராமப் புறங்களிலே புரிகிற அட்டகாசத்திற்குஒருமுடிவு கட்டவில்லையென்றால் தொழிற்சாலைகளில்வேலை செய்யும் தொழிலாளிக்கு பாதுகாப்பு இல்லை. தொழிற்சாலையும் நடத்தி, அதன் மூலம் கொள்ளை லாபம் அடித்து அந்தப் பணத்தைக் கொண்டு சின்னஞ்சிறிய விவசாயிகளைவிரட்டியடித்து விட்டு நிலம் வாங்கி கூலி விவசாயிகளையும் வைத்து அவர்கள் புரியும் அட்டகாசம் கொஞ்ச நஞ்சமல்ல" என்றார்.

"சரி இதைத் தடுக்க என்னசெய்கிறீர்கள்" என்றேன்.

### கூலி விவசாயிகள் போராட தொழிலாளர் உதவி

"கூலி விவசாயிகளுக்கு இவர்கள் நியாயமான சம்பளம் கொடுப்பதே இல்லை. இதை எதிர்த்துப் போராட உதவி செய்கிறோம்." என்றார். "அரிஜன விவசாயத் தொழிலாளிகள் ஏனைய விவசாயத் தொழிலாளர்கள் எங்களைப் போன்று கூலி உயர்வு கோரி அதற்காக எங்களைப் போலவே போராடுவது வெள்ளக்கிணர் வட்டாரத்தில் புதுமையான நிகழ்ச்சி" என்றார் அவர். "அவர்களிடையே வேலை செய்வதற்கு எங்களுக்கு ஒரே உற்சாகம். கேள்விகேட்கஆளில்லாமல் கொடுமைப்படுத்தப்பட்ட அரிசனங்கள் நமது செங்கொடியைக் கண்டவுடன் ஈ மொய்ப்பதுபோலமொய்க்கின்றனர். "தலை விதி, தலை விதி" எனச் சொல்லிக் கொண்டிருந்த அந்த ஜனங்கள் செங்கொடி வந்தபிறகு. தலை நிமிர்ந்து போராடுகிறார்கள்; கூலிஉயர்வும் கிடைத்தது. நமது கட்சி மீது அவர்களுக்கு நல்ல நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. நமது தலைவர்கள் வருவதை அவர்கள் எதிர்பார்த்துஉள்ளனர்" என்றார்.

### சாதிவேற்றுமை தகர்ந்தது

"அரிஜன விவசாயச் சேரிகளுக்கு ஓட்டுக்காக இதுவரை காங்கிரஸ் தலைவர்களும், தி. மு. க. தலைவர்களும் வந்தார்கள். ஆனால் அவர்களது வீட்டில் இந்தத் தலைவர்கள் ஒருநாள் கூட தண்ணீர் சாப்பிட்டது கிடையாது. ஆனால் நமது தலைவர்கள் அங்கேபோனால் நேரடியாக அவர்கள் வீட்டில் போய் உட்காருகிறார்கள்; சாப்பிடுகிறார்கள். நாங்களும் இப்பொழுது சாதி வேற்றுமைகளை மறந்து அங்கு சாப்பிடுகிறோம்" என்று சிரித்துக் கொண்டே நீண்ட நெடும் பழங்காலச் சுமையிலிருந்து விடுதலை பெற்ற உணர்வுடன் கூறினர் அந்த இளந் தோழர்.

"சாதி வேற்றுமை பார்க்காத ஒரே கட்சி நம்ம கட்சிதான் என்பதை அரிசனங்க இப்ப நல்லாதெரிஞ்சுக்கிட்டாங்க" என்றார்.

### புதிய உற்சாகம்

"நகர்ப்புறத்துக் குள்ளே சுற்றித்திரிந்த நாங்க, மில்களுக்குள்ளே வந்த நாங்க இந்தமாதிரி வேலைகளிலே ஈடுபட்ட பிறகு எங்களுக்கு ஒரு புதிய உற்சாகம் பிறந்திருக்கு" என்று உணர்ச்சி பொங்க கூறினர் தோழர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கை ஜீவனுள்ள ஒருபிடிப்பைகிராமப்புற மக்களிடையே பெற்று வருகிறது என்பதை உடையாம்பாளையம் தோழர்களின் உற்சாகமான பேச்சுக்களும், தந்ததகவல்களும் எடுத்துக் காட்டின.

"நம் கட்சிக்காக ஒரு புதிய கட்டிடம்மதுரையிலே உருவாகிறதே, அதற்கு உங்கள் பங்கென்ன?" என்று கேட்டேன்.

"எங்களுக்கு கொடுத்த பங்கை நிச்சயமாக நிறைவேற்றுவோம்" என்றனர்.

"முன்பு நீங்கள் வாக்குறுதி அளித்ததைவிட மூன்று மடங்கு தேவைப்படுமே" என்றேன்.

"அதனாலென்ன? நம்புங்கள்; நிச்சயம அந்த மூன்று மடங்கு கோட்டாவை நிறைவேற்றித்தருவோம்" என்றன.

ஆறு நாட்களும் சுற்று வட்டாரத் தோழர்களெல்லாம் மாநில குழுக்கூட்டம் நடந்த இடத்துக்கு வந்து மாநிலம் முழுவதிலிருந்தும் வந்திருந்த மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர்களைப்பார்த்து உரையாடி அகம் மகிழ்ந்தனர்.

### போராட்ட வரலாறும், புத்துணர்வும்

எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு அவர்களில் பலர்பிறக்காத நாட்களுக்கு முன்பு கம்யூனிஸ்ட் கட்சி இயக்கம் உருவாகி கடும் போராட்டங்களுக்கு மத்தியிலே வளர்ந்த செய்திகளை எல்லாம்கேட்டு உற்சாகமடைந்தனர்.

கம்யூனிஸ்ட் இயக்கம் வேரூன்ற மூத்த தோழர்கள் ஆற்றிய பல்வேறு பணிகளைகேட்டபின்"அதே போல நாங்களும் உழைப்போம்"என்றஉறுதிவாய்ந்த குரலில் கூறிய வார்த்தைகள் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் "இளம் தலைமுறை தயாராகிறது. அது எம்மை விட சிறந்த முறையில் பணியாற்றிடும். இந்த இயக்கம் துரிதமாகவே பிரம்மாண்டமான முறையில் விரிவடையும்" என்றஉள்ளப் பூரிப்புடன் மாநிலக் குழுத் தலைவர்கள் கோவை வடக்கு குழுத் தோழர்களின் வரவேற்பு உபசாரங்களைப் பெற்று உற்சாகத்துடன் திரும்பினர்.

# காங்கோ நாட்டிலே தொழிலாளர் ஆட்சி

மாஸ்கோ, நவ. 10 —

**ஆப்பிரிக்கா கண்டத்தில் இரு காங்கோ நாடுகள் உள்ளன. ஒன்று மோபுடு என்ற ராணுவ சர்வாதிகாரியின் தலைமையிலுள்ள நாடு. மற்றதில் காங்கோ தொழிலாளர் கட்சியின் தலைமையில் நடக்கும் ஆட்சி. தொழிலாளர் கட்சி ஆட்சி நடத்தும் காங்கோ நாட்டின் தொழிலாளர்நல அமைச்சரும், காங்கோ தொழிலாளர் கட்சியின் மத்தியக் கமிட்டி உறுப்பினருமான தோழர் அலெக்சாண்டர் தேங்கு என்பவர் மாஸ்கோ வந்திருந்தபோது தன் நாட்டு நிலைமை குறித்து இங்கு ஆற்றிய உரையின் சுருக்கம் பின் வருமாறு:-**

மாபெரும் தலைவர் மாமேதை லெனின்தலைமையில் ரஷியத் தொழிலாளி வர்க்கம் நடத்திய போராட்டத்தினால் காங்கோ நாட்டு மக்கள் உற்சாகமுற்று கிளர்ந்தெழுந்தனர்.

எழுச்சியுற்ற காங்கோ மக்கள் ஒடுக்குமுறை ஆட்சிக்கும், ஏகாதிபத்தியத்துக்குச்சேவை புரிவதற்கென்றே உருவாக்கப்பட்ட காலனியாதிக்கத்துக்கும் 1963-ஆகஸ்டு மாதம முற்றுப்புள்ளி வைத்தனர். அடக்குமுறை ஆட்சியாளர்களையும், காலனியாதிக்கவாதிகளையும்பதவியிலிருந்து விரட்டியடித்தனர்.

### தொழிலாளர் கட்சி

ஆப்பிரிக்க நாடுகளுக்கு முன்னேயுள்ள முக்கியமான கடமை — இந்நாடுகளுக்கிடையே செயலாற்றுமையை உருவாக்குவதும் பாதுகாப்பதுமேயாகும். தேசிய விடுதலைப் போராட்ட காலத்திலே, நமது நாட்டு மக்கள் ஒரு ஒற்றுமையான கட்சியை— "காங்கோதொழிலாளர்கள் கட்சி"யை—உருவாக்கினர்கள். அவ்வாறு உருவாக்கப்பட்ட காங்கோ தொழிலாளர் கட்சிதான் நமது நாட்டின் — காங்கோ மக்கள் குடியரசின் முன்னணி அமைப்பாகும்.

மனிதனைமனிதன்சுரண்டுவதை மாற்றி புதியதொரு சமுதாயத்தை— சோசலிச சமுதாயத்தை—உருவாக்குவது இந்த அமைப்பின் குறிக்கோளாகும்.

"எல்லாம் மக்களுக்காகவே" என்றகொள்கையை நமது கட்சிகொண்டுள்ளது

### மார்க்சிசம்-லெனினிசம்

நம்முடையகட்சி தொழிலாளர்களையும் விவசாயிகளையும் ஆதாரமாக-ஆதரவாகக கொண்டுள்ள கட்சியாகும். நாட்டின் முழுமையான விடுதலைக்காகவும் விஞ்ஞான சோசலிசத்தின் அடிப்படையில் நாடுவளர்ச்சியடையவேண்டும் என்பதற்கும் தங்களது வாழ்வை அர்ப்பணித்துவரும் வீரர்களையும், புரட்சிகர அறிவாளிகளையும்ஆதரவாகக்கொண்டுள்ள கட்சியாகும். நமது கட்சியின் கொள்கை மார்க்சிசம்-லெனினிசத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

விடுதலைக்காகவும், சோசலிசத்திற்காகவுமான போராட்டத்தில் மக்களிடையே தத்துவார்த்தப் பணிகளை மிகவும் விரிந்த அளவில்— விரிவான முறையில் செய்து கொண்டிருக்கிறோம்.

### தொழிற் சங்கம்

நாங்கள் தொழிற்சங்கங்களின் மகா சம்மேளனத்தை உருவாக்கியிருக்கிறோம்; மாதர் சங்கங்களை ஏற்படுத்தியிருக்கிறோம்; இளைஞர் சம்மேளனங்களை தோற்றுவித்திருக்கிறோம்.

காங்கோ தொழிற்சங்கங்களின் மகா சம்மேளனம் உழைப்பாளி மக்களின் நலன்களைப் பாதுகாப்பதும், அவர்களது கலாச்சாரத்தை வளர்த்து முன்னேற்றுவதும், போராட்டத்திற்கு ஒன்றுபடுத்துவதும் தமது குறிக்கோள்களாகக் கொண்டுள்ளது.

பொதுத்துறையின் நிர்வாகத்தில் இந்த மகா சம்மேளனம் பங்கு வகிக்கிறது; பொதுமக்களின் நலன்களையும்,தொழிலாளர்களது நலன்களையும் புறக்கணித்துவிட்டு தனது நலனையே குறிக்கோளாகக் கொள்ளும் தொழில் பிரபுத்துவம் உருவாவதைத் தடுத்து நிறுத்துகிறது. கூட்டுறவுத் துறையில் கூட்டுறவுகளின் நிர்வாகத்திலும், அமைப்பிலும் தாமாகவே பங்கு கொள்ளக் கூடிய வகையில் பொது மக்களுக்கு உணர்வையும், உற்சாகத்தையும் இந்த தொழிற்சங்கங்களின் மகா சம்மேளனம் அளிக்கிறது

காங்கோ நாட்டுஇளைஞர்களையும்,இளம்தொழிலாளர் இளம விவசாயிகளின் சங்கம்,மாணவர்சங்கம்,தேசிய இளைஞர் முன்னணிஇயக்கம் ஆகியவற்றையெல்லாம் ஒன்றிணைத்தமைக்கப்பட்ட "காங்கோ சோசலிச இளைஞர் சம்மேளனம்"கட்சியின் வழிகாட்டுதலின் கீழ் இளைஞர்கள் அனைவரையும் ஒன்றிணைத்து நாட்டின் எதிர்காலத்தை உருவாக்கும் சிற்பிகளாக உருவாக்கும் என்று நம்புகிறோம்.

தேசியப் பிரச்னைகளைத் தீர்ப்பதில் கட்சிக்கு உதவி புரியும் வகையில் இளைஞர்களைப் பயிற்றுவித்து உருவாக்கித் தருகிறது. ஏகாதிபத்தியத்தை எதிர்த்தும், சுதந்திரத்துக்காகவும் சோசலிசத்துக்காகவும் தொழிலாளிவர்க்கம் நடத்தும் போராட்டத்தில் அவர்களுடன் ஒன்றுபட்டு நிற்குமாறு காங்கோ இளைஞர்களுக்கு இந்த இளைஞர் சம்மேளனம் அறை கூவல் விடுத்துள்ளது.

### மாதர் சங்கம்

புரட்சிகரமான "காங்கோ மாதர்கள் சங்கம்" நமது நாட்டில் உள்ள எல்லா மாதர்களையும் ஒன்றுபடுத்தியுள்ளது. இந்தச் சங்கம் மாதர்களின் உரிமைகளை நிலைநாட்டவும், குடியரசுக்கு ஆதரவு அளிக்கவும் அமைக்கப்பட்டது.

பொது விவகாரங்களில் மாதர்கள் பங்குகொள்ளுவதற்கும்-நமது நகரங்களிலுள்ள நவீன ஆலைகளில் பணிபுரிவதற்கும் - குழந்தைகள் நல பராமரிப்பு நிலையங்களை அமைத்திடுவதற்கும்- இந்தச் சங்கமானது எல்லா வித உதவிகளையும் மாதர்

(4-ஆம் பத்தி பார்க்க)

(6-ஆம் பத்தி தொடர்ச்சி)

களுக்கு அளிக்கும்.

கடந்தசில ஆண்டுகளாக நடத்திவரும் போராட்டத்திலே கிடைத்திட்ட அனுபவத்தை வைத்துப் பார்க்கின்றபொழுது அரசாங்க அலுவல்களிலும், நாட்டு நடப்புகளிலும் பொதுமக்களை ஈடுபடுத்திடவேண்டும் என்று அறிய வந்தோம். நாட்டின் சுகத்தையும் முகத்தையுமே மாற்றி, மக்களுக்கு நன்மை பயக்கும் மாபெரும் மாறுதல்களைக் கொண்டுவர வேண்டுமானல் இப்போதுள்ள மக்கள் ஜனநாயக அரசை பலப்படுத்தவேண்டும்.

### சுரண்டலற்ற சோஷலிசத்திற்காக

இந்த ஆண்டு ஜூலை மாதம நடந்த தேசிய மாநாடானது, காங்கோ தொழிலாளர் கட்சிக்கு மாபெரும் வெற்றியாகும். விஞ்ஞான பூர்வமான சோஷலிசத்திற்கே நமது மக்கள் ஆதரவு அளிக்க வேண்டும்.

காங்கோ தொழிலாளர் கட்சியால் தலைமை தாங்கப்படும காங்கோமக்கள், சுதந்திரப் பாதையை மேற்கொண்டிருக்கிறார்கள். மனிதனை மனிதன் சுரண்டும் கொடுமைகள் அத்தனைக்கும் எதிராக, விட்டுக்கொடுக்கா போராட்டம் நடத்திட முனைந்திருக்கிறார்கள்.

காலனி ஆதிக்கத்தின் மிச்சசொச்சங்கள் அனைத்தையும் தீர்த்துக்கட்டும் பொருட்டுசோவியத் யூனியனின் அனுபவங்களை கருத்தூன்றிப் படித்துவருகிறது எங்கள் காங்கோகுடியரசு.

# வலது கம்யூனிஸ்டுகளே நீங்கள் சொல்லுங்கள்

பத்திரிகையைப்படித்தால் கல்யாண சுந்தரம் டெல்லி பயணம், திரும்ப சென்னைக்குப் பயணம்! இன்னொரு குற்றச்சாட்டு பட்டியல் தயார் செய்து விட்டார்! நாடாளுமன்றத்தில் எழுப்புகிறார். இப்படி பல விறுவிறுப்பான செய்திகள் வந்துகொண்டே இருக்கின்றன. அதைப்பார்த்து மகிழ்ச்சியில் மூழ்கி திளைத்துக் கொண்டிருக்கும் அந்த கட்சியின் ஊழியர்களுக்கு ஒரு கேள்வி?

இதே உங்கள் கட்சி 1967-ல் என்ன நிலை எடுத்தது? 1971-ல் என்ன நிலை எடுத்தது? 1967-ல் காங்கிரஸ் எதிர்ப்பு முன்னணியில் சேர மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி அறைகூவி அழைத்த பொழுது, பிற்போக்கு பிண்டம், கொள்கையற்ற கோமாளி, தி. மு.க. வுடன் கூட்டா? அதைவிட நாங்கள் தூக்கு கயிற்றிலே தொங்குவோம் என்றது.

அதன்பிறகு தி. மு. க. ஆட்சிக்கு வந்தது. காங்கிரசுக்கு மாற்றுக்கொள்கை கொண்ட கட்சி எங்கள் பொதுவுடைமை கட்சி, நிலை என்ன பூங்காவை சமைக்கப் பிறந்த உண்மையான கம்யூனிஸ்ட்டுகள்நாங்கள்தான் என்று கூறிய தி. மு. க, வினரின்முகமூடி இரண்டே ஆண்டுகளில் கிழிந்தது.

தி. மு. க. கடைபிடிக்கும் தொழிலாளர் விரோத, மக்கள் விரோதக் கொள்கைகள் காரணமாக தி. மு. க. வினரோடு எந்தவித தொடர்பும் வைத்துக் கொள்ள மாட்டோம் என்று எங்கள் கட்சிஅறிவித்தது.

1971-ல் தேர்தல் வந்தது. கருணாநிதி வருந்தி வருத்தி அழைத்தார். நாங்கள் மறுத்துவிட்டோம. ஆனால் உங்கள் கட்சியின் நிலை என்னவாயிருந்தது?

நடைமுறையில் வெண்மணியில், சிம்கோ தொழிற்சாலையில், அரவங்காட்டில் நடத்திய துப்பாக்கிப் பிரயோகங்கள் தொழிலாளி, விவசாயி போராட்டங்களில் அதன் போலீஸ் கொள்கை, இத்தனையும்கண்டபிறகும் தி.மு. க. வை முற்போக்கு கட்சி என்றது. அதைக்கட்டித் தழுவிக்கொண்டது. அவர்கள் போட்ட பட்ஜெட்டை சோஷலிஸ பட்ஜெட் என்றது.

இப்படிச்சொல்லி ஓராண்டு ஆகவில்லை- திடீரென்று ஒரே கூச்சல்! மந்திரிகள், வட்டங்கள், மாவட்டங்கள் சொத்துக் கணக்கு வேண்டும்! இவர்கள் ஊழல் பேர்வழிகள்! விட்டேனபார் என்கிறார்கள்! விடவேண்டாம்! விடக்கூடாது! அது சரி. உங்களை ஒன்று கேட்க விரும்புகிறோம்.

எம். ஜி. ஆர். உட்கட்சி போராட்டம நடத்தி ஒரு குறிப்பிட்டகட்டத்தில்வேறு வழியில்லாமல இன்று வெளியே வந்து இயக்கம நடத்துகிறார். அவர் நிலை புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் உங்கள் நிலை அப்படியில்லையே? தனிக் கட்சியாயிற்றே. அப்படியிருக்கையில் நீங்கள் முற்போக்குக் கூட்டணி அமைத்து தேர்தல் பிரச்சாரத்திற்குப் போகும் பொழுது உங்கள் கல்யாணசுந்தரம், கருணாநிதி பக்கத்தில், ஆதித்தன பக்கத்தில், அன்பழகன் பக்கத்தில், உங்கள் தங்கமணி முத்து பக்கத்தில், அக்னி ராஜு பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு போனார்களே! அப்பொழுது இவர்களுக்கு பங்களாக்கள் இல்லையா? கார்கள் இல்லையா? சொத்துக்கள் இல்லையா? இவர்களுக்கு அந்த சொத்துக்கள் எப்படி வந்தது என்று உங்கள் கட்சிக்கு அன்று தோன்றவில்லையா?

புத்தருக்கு அரச மரத்தடியில் ஞானோதயம் தோன்றியதுபோல் உங்கள் கட்சி இன்று திடீரென்று எடுக்கும் நிலைக்குக் காரணமென்ன? இந்திரா காங்கிரசுக்கும் தி. மு. க. வுக்கும் முறிவு ஏற்பட்டதானல் தான் உங்களுக்கும் அந்த ஞானோதயம் பிறந்தது என்றால் தவறு?

—எழிலன்

# சொத்து தகராறு

சொத்துக் கணக்கு கேட்டு, சூருவளிப் பிரச்சாரம் நடக்கிறது. ஆர்ப்பாட்டங்களும், ஊர்வலங்களும் தொடர்ந்து நடக்கின்றன. தடியடியும், துப்பாக்கிச்சூடும், பொதுச்சொத்துக்களுக்கு சேதமும் தொடர்ந்து நடக்கிறது.

இதுசம்பந்தமாக அந்தத் தலைவர்களும் என்ன பேசி வருகிறார்கள் என்பதின் சுருக்கம்:—

### 5 கோடி ரூபாய் சொத்துள்ள மந்திரி எம். ஜி. ஆர். கூறுகிறார்

வடாற்காடு மாவட்டம் செய்யாறில் 19—11—72-ல் எம். ஜி. ஆர். பேசுகையில்:

"தவறான வழிகளில் திரட்டப்பட்ட பணம் லட்சக் கணக்கில் அல்ல. கோடிக் கணக்கில் சிலரிடம் குவிந்து கிடக்கிறது. இது மக்களின் வரிப் பணம். ஒரே ஒருவரிடம் மட்டும் ரூ. 5 கோடி சொத்து சேர்ந்திருக்கிறது" என்றார்.

—அலை ஓசை 19—11—72

### எம். ஜி. ஆருக்கு நிலம் மாதவன் பேச்சு

சென்னை தேனாம்பேட்டையில் 23—11—72ல் நடந்த பொதுக்கூட்டத்தில் அமைச்சர் மாதவன் பேசுகையில் :

"எதிர்க்கட்சிக்காரன் சொல்லுகிறான் என்பதற்காக எங்கள் மீது எம். ஜி. ஆர். சந்தேகப்படுகிறார், இது பற்றி அவரிடம் கேட்டபோது என்ன பதில் சொன்னார்?

"நானா புகார் சொன்னேன். நான் சொல்லவில்லை. என்னிடத்திலே பொதுமக்களும் புகார் சொல்லவில்லை. எதிர்க்கட்சிக்காரன் சொல்லுகிறான். ஆகவே, நான்சந்தேகப்படுகிறேன்"என்கிறீர்களே!

நம்மை நாமே சந்தேகித்துக்கொண்டு, அழித்துக்கொள்ளலாமா? என்ன சொல்லவில்லை எதிர்க்கட்சிக்காரன். அவர்கள் சொன்ன ஊழல் குற்றச்சாட்டுகளையெல்லாம் ஏற்றுக்கொள்ளத் தொடங்கினால் என்ன ஆகும் ?

சில ஆண்டுகளுக்கு முன்னால், தமிழக சட்டமன்றத்திலே கேட்டார் ஒரு எதிர்க்கட்சிக்காரர். புரட்சி நடிகர் எம். ஜி. ஆர். உங்கள் கட்சியில் இருக்கிற காரணத்தினாலே 10 லட்சம் ரூபாய் மதிப்புள்ள இடத்தை. — அவருடைய சத்தியா ஸ்டூடியோவுக்குப் பின்னாலேயுள்ள 39 கிரவுண்டு நிலத்தை, ஏழைகளுக்குக் கொடுப்பதற்குப் பதிலாக, 97,500 ரூபாய்க்கு விலை மதிப்பிட்டு குத்தகைக்குக் கொடுத்திருக்கிறீர்கள். நியாயம்தானா? 10 லட்சம் ரூபாய் மதிப்புள்ள 39 கிரவுண்டு நிலத்தை, ஏழைகளுக்குக் கொடுப்பதற்குப் பதிலாக, கோடீஸ்வரர் எம். ஜி. ஆருக்கு நீங்கள் குத்தகைக்குவிட்டது நியாயமா? அடுக்குமா? கட்சிக்காரனைவளர்க்கலாமா?கோடீஸ்வரர் எம. ஜி. ஆருக்குக் கொடுக்கலாமா?"—என்று சட்டசபையிலே கேட்டார்கள்.

என்ன பதில் சொன்னேன்? எதிர்க்கட்சிக்காரன் சொன்னதை ஏற்றுக் கொண்டோமா? எது நியாயமோ அதைச் செய்தோம். என்னுடைய கட்சிக்காரன் என்பதற்காக, அவருடைய உரிமையைப் பறிப்பதை நாங்கள் ஏற்றுக் கொள்ள மாட்டோம் என்று உங்களுக்காக சட்டமன்றத்திலே வாதாடினேம். மறந்துவிட்டீர்களா?" என்று கேட்டார்.

—மதுரை தினத்தந்தி 23-11-72

### தீக்குளிக்கத் தயார்! அன்பில் தர்மலிங்கம் பேச்சு

அமைச்சர் அன்பில் தர்மலிங்கம் 19-11-72ல் திருச்சியில் நடந்த பொதுக் கூட்டத்தில் பேசுகையில்!

"தி. மு. க. அமைச்சர்கள் மீதும், அரசு மீதும் கூறும் ஊழல் குற்றச்சாட்டுகளை நிரூபித்தால், நான் தீக்குளிக்கத்தயாராக இருக்கிறேன். அதை நிரூபிக்காவிட்டால், கல்யாணசுந்தரம் தீக்குளிக்க வேண்டும். இதற்கு கல்யாணசுந்தரம் தயாரா?— என்று கேட்டார்.

— அலைஓசை 19—11—72

### கணக்கு காட்டாதவர்கள் பழிசுமத்த நினைப்பது ஏன்? எம். ஜி. ஆர். கேள்வி

அரசிடம் என்னுடைய கணக்குகளைக்காட்டியதால்தான் அவர்கள் வரி விதித்தனர். வரியைக் கட்டி வருகிறேன். ஆனால், கணக்கைக்காட்டாதவர்கள் என் மீது பழிசுமத்த நினைப்பது ஏன் ?

என்னுடைய கணக்குகளை மத்திய அரசிடம் காட்டியிருக்கிறேன். அதன் மீது தான் அவர்கள் வரிபோட்டியிருக்கிறார்கள். என்னுடைய குற்றச்சாட்டெல்லாம், தி. மு. க. தலைவர்கள் கணக்குகளைக் காட்டாமல் சொத்துக்களைச் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள்—என்பது தான்.

அதுமட்டுமல்ல, எனக்கு வந்த கறுப்புப் பணத்தையும் கூட அரசிடம் தெரிவித்து, வரி கட்டி வருகிறேன். இந்தநிலையில், என் மீது பழி சுமத்த நினைப்பது வீண் முயற்சியேயாகும்"— என்று கூறினார்.

தினமலர் 23—11—72

### கணக்கு கேட்க எம். ஜி. ஆர். யார்? அன்பழகன் கேள்வி

தஞ்சை திலகர் திடலில் 22—11—72-ல் நடந்த பொதுக்கூட்டத்தில், அமைச்சர் அன்பழகன் பேசுகையில் :

எம். ஜி. ஆர். கணக்கு கேட்கிறார். என்னுடன் 25 ஆண்டு மனைவியாக இருந்தவளுக்கு என்னிடம் கணக்கு கேட்க உரிமை இல்லையென்றால்,

(4-ம் பக்கம் பார்க்க)

# கண்ணோட்டம்

## ஐம்பெரும் கோரிக்கைகளும் அண்ணா தி. மு. க.வும்

மக்களின் வரிப்பணத்தில் அமைச்சர்கள் தங்கள் மனைவி, குழந்தைகள், உறவினர், நண்பர்கள் பெயரில் நகை செய்து போடுகிறார்கள். சொத்து வாங்குகிறார்கள். இவர்கள் என்ன வியாபாரிகளா? தேசத் தொண்டர்களா? என்று 20—11—72-ல் வேலூரில் நடந்த பொதுக் கூட்டத்தில் எம். ஜி. ஆர். கேட்டார்.

அவர் மேலும் பேசுகையில்:—

"எது எதற்கோ உச்சவரம்பு கொண்டு வருகிறார்கள். ஆனால் இவர்களோ எந்த வரம்புமின்றி சொத்துச் சேர்க்கிறார்கள். பொதுமக்கள் வரிப்பணத்தை உங்கள் சொத்தாக்குகிறீர்களே. இது நியாயமா? மந்திரிகள் அவர்களுக்குத் தெரிந்தவர்கள, உறவினர்கள் பெயரில் வாங்கியிருக்கும் சொத்துக்கள் தான் எவ்வளவு? அடேயப்பா!......"

மேற்கண்டவாறு மக்களின் வரிப்பணத்தில் தான் மந்திரிகள் சொத்துச் சேர்த்துள்ளதாகக் கூறுகிறார்.

அவர் தொடர்ந்து பேசுகையில், தொண்டர்களின் நிலைமை பற்றியும் விளக்கினார். எப்படி?...

"தொண்டனுக்கு வாழ்வில்லை, வழியில்லை. அடியையும். உதையையும் தாங்கிக் கொண்டு, ரத்தம் சிந்தி உழைத்து, உங்களை ஆட்சி பீடத்தில் அமர்த்தினானே, அந்தத் தொண்டனுக்கு நீங்கள் செய்தது என்ன? வாழ்க, வாழ்க என்று அவன் குரல் கொடுத்தான். சொல்லச் சொல்ல நீங்கள் வாழுகிறீர்கள். இல்லை. உங்கள் குடும்பத்தை வளமாக வாழவைக்கிறீர்கள். ஆனால், அந்த தொண்டன் வாழ வழி இன்றித் தவிக்கிறான்"...

இவ்வாறு மந்திரிகள் தத்தம் உறவினர்களுக்குச் சொத்துச் சுகம் சேர்த்துக்கொண்டு, தங்களை ஆட்சி பீடத்திற்கு அனுப்பிய தொண்டர்களைக் கவனிக்காமல் திராட்டில் விட்டு விட்டதாகவும் குற்றம் சாட்டுகிறார்.

மேலும் அவர் பேசுகிறார் :

'நீங்கள் வசதியாக வாழ்ந்து கொண்டிருக்கிறீர்களே, அது யார் வீட்டுப்பணம்? மாடாக உழைத்துப்பாடுபட்டு, ஓடாகத் தேய்ந்த மக்கள் கொடுத்த பணம் அல்லவா! அதை அனுபவிக்க இவர்கள் யார்? இதை நாம் மன்னிக்கலாமா? மக்களிடமிருந்து எடுத்த பணத்தை அவர்களிடமே ஒப்படைத்துவிட்டு, "நாங்கள் தவறு செய்து விட்டோம் எங்களை மன்னித்து விடுங்கள்" என்று மன்னிப்புக் கேட்க வேண்டாமா? இதைத்தான் நாங்கள் வற்புறுத்துகிறோம். அப்படி அவர்கள் கேட்கும் வரை விடமாட்டோம் மன்னிப்பு கேட்க வைத்தே தீருவோம்"—என்று கூறினர்.

அதாவது :

1. மக்களின் பணத்தை மக்களிடமே ஒப்படைத்து விடவேண்டும்.
2. மன்னிப்புக்கேட்க வேண்டும்.

எம். ஜி. ஆர். கேட்பது இவைதான்.

ஆமாம்! மக்களின் வரிப்பணம் பொதுப் பணம், அதில் கைவைத்தவர்கள் மீது, சுப்ரீம் கோர்ட் நீதிபதியைக் கொண்டு, அவர் முன்னால் திட்டவட்டமான ஆதாரங்களை முன்வைத்து, விசாரணை நடத்தச் செய்திட வேண்டியது உடனடி அவசியம். இதற்கு நமது முழு ஆதரவும் உண்டு

அடுத்து என்ன ?

**ஊழல் மூலம் சம்பாதித்த சொத்துகளை ஒப்படைத்து விட்டால்......அந்த தொண்டனுக்கு வாழ வழி பிறந்து விடுமா ?**

வழிபிறக்க வழிகோலுவதுதான் முக்கியமான பிரச்னை. தொண்டனுக்கு வாழ வழி என்று சொன்னால் அதன் அர்த்தம், வறுமையால் வாடிக்கொண்டிருக்கும் நாட்டு மக்கள் அனைவருக்குமே வாழ வழி என்றுதான் அர்த்தம்.

அப்படியானால், வறுமையை ஒழித்துக்கட்ட என்ன செய்யவேண்டும்? வாழ்வளித்து வளமாக்க வழி செய்வது எப்படி?

1) விஷம்போல் விலைவாசி உயர்ந்துகொண்டே போனால்,வாங்குகிறசம்பளம்வாழ்க்கை நடத்தப்போதுமா? வாத துன்பம் என்றைக்காவது தீருமா?

ஆகவே, விலைவாசி உயர்வை எதிர்த்துப் போராட வேண்டாமா?

விலைவாசிகளை உயர்த்துவதின் மூலம்தானே, நாட்டு மக்களை பெரு முதலாளிகள் கொள்ளையடிக்கிறார்கள்! ஆளும் கட்சிக்காரர்கள் மக்களின் வரிப்பணத்தில் அடித்த கொள்ளையைவிட, இது ஆயிரமாயிரம மடங்கு கொள்ளை அல்லவா!

அடுத்து, தொண்டனுக்கு வாழ வழி வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்? படித்துவிட்டு வேலையில்லாது வாடும் லட்சக்கணக்கான இளைஞர்களுக்கு வேலை கிடைத்தால்தானே, வாழ வழி பிறக்கும்! வேலைகளைப் பறித்திடும் விசைத்தறிகளையும், டிராக்டர்களையும், உழைப்புச் சிக்கன நவீன இயந்திரங்களையும் புகுத்தப்படுவதை எதிர்த்துப் போராட வேண்டாமா?

வேலையில்லாக் காலத்துக்கு உதவித் தொகை கிடைக்கப்போராட வேண்டாமா?

அடுத்து, கிராமப்புறங்களிலே கோடி கோடி விவசாயத் தொழிலாளிகள் தினம் ஒன்னரை ரூபாயும். இரண்டு ரூபாயும் ஆக கஞ்சி கூலி பெற்று வருகிறார்களே இவர்களுக்கு தினம் 5 ரூபாய் கூலி கிடைத்தால் தானே இவர்களுக்கு வாழ வழி பிறக்கும்! இதற்காகப் போராட வேண்டாமா?

தொண்டனை வாழ வைக்கவும், வாழ வழிசெய்யவும் இந்த கோரிக்கைகள் மிக மிக அவசியம் அல்லவா! அவசரம் அல்லவா!

எல்லாவற்றுக்கும் மேலாக- இன்னொரு முக்கிய கோரிக்கை உண்டு. அது என்ன?

ஊதிய உயர்வுக்காக தொழிலாளர்கள் நடத்தும் போராட்டங்களை. போலீசை ஏவி அடக்குகிறது அரசு. இதுபோலவே, நிலத்துக்காக விவசாயிகள் நடத்தும் போராட்டங்களை அடக்குகிறார்கள். ஜனநாயக உரிமைகள் கேட்கும் மாணவர்களையும், மற்றவர்களையும் அடக்குகிறார்கள். எதிர்கட்சிகளையும் அடக்கிட போலீஸைப் பயன்படுத்துகிறார்கள்.

இந்தப் போராட்டங்களை போலீஸ் படையை ஏவி அடக்கும் அரசு கொள்கையை எதிர்த்துப்போராட வேண்டாமா?

போலீஸ் தலையிடாமல் இருந்தால்தானே, இந்தப் போராட்டங்கள் வெற்றி பெறுவது சுலபம்! அதனால், கோடானுகோடி மக்களுக்கு வாழ வழி பிறக்கும் அல்லவா!

இதை ஒப்புக்கொண்டு போராட முன்வரும் சகல ஜனநாயக் கட்சிகளுடனும். இடதுசாரிக கட்சிகளுடனும் இணைந்து நிற்க நாங்கள் தயார்! நாங்களும் தயார் என்று எம். ஜி ஆரின் அண்ணா தி. மு. க.வும் எப்பொழுது சொல்லும்?

—ஐ. மா. பா.

## பாலிடெக்னிக் மாணவர் அடையாள வேலைநிறுத்தம்

பொள்ளாச்சி, நவ 24—பொள்ளாச்சியில் நாச்சிமுத்து பாலிடெக்னிக்கைச் சேர்ந்த மாணவர்கள் போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்து பெரும் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர்.

போடி, பாளையங்கோட்டை ஆகிய ஊர்களில் நடைபெற்ற போலீஸ் துப்பாக்கிச் சூட்டைக் கண்டித்து நவம்பர் 22-ம் தேதியன்று ஒருநாள் அடையாள வேலைநிறுத்தம் செய்தனர்.

பின்னர் நடைபெற்ற இரங்கற் கூட்டத்தில் பாளையில் இறந்த மாணவர் லூர்துநாதனின் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து இரங்கற் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மாணவர் கூட்டத்தில் வேணுகோபால், நாச்சிமுத்து ஆகியோர் பேசினர்.

## சரக்கு கட்டணம் உயரும் ரயில்வே மந்திரி தகவல்

புதுடெல்லி, நவ. 23—சரக்குகளை அனுப்ப ரயில் வேகன்கள் பதிவு செய்யும் கட்டணத்தை உயர்த்தலாம் என்று அரசு கருதுவதாக ரயில்வே மந்திரி டி. ஏ. பாய் கூறினர்.

ரயில்வே அமைச்சக மானியகோரிக்கையின்மீது நடந்த விவாதத்திற்கு பதிலளித்து பேசிய டி. ஏ. பாய் கூறியதாவது :—

சரக்கு ரயில் போக்குவரத்தை பரவலாக்குவதற்காக அரசு பல நடவடிக்கைகளை எடுத்து வருகிறது. பெரிய வியாபாரிகளும், தொழில் அதிபர்களும் சரக்கு ரயில் பெட்டிகள் (வேகன்கள்) பலவற்றை தங்களுக்கே பதிவு செய்து 'புக்' பண்ணி விடுகிறார்கள்.

### கடைசி நேரத்தில் ரத்து

எனவே அதன் அடிப்படையில் அவர்களுக்கு நிறைய வேகன்கள் ஒதுக்கப்படுகின்றன. ஆனால் கடைசி நேரத்தில் வந்து தங்கள் 'ஆர்டர்களை' ரத்து செய்து வேகன்களை வெறுமனே திருப்பி அனுப்பி விடுகிறார்கள். ஒரு குறிப்பிட்ட மாதத்தில் 80 ஆயிரம் 'ரிஜிஸ்ட்ரேசன்; ரத்து செய்யப்பட்டு இருக்கிறது.

இது போன்ற நிகழ்ச்சிகளால் சரக்கு ரயில்பெட்டிகள் தாராளமாக கிடைப்பதில்லை. எனவே வேகன் பதிவு கட்டணத்தை உயர்த்தலாம் என்று அரசு கருதுகிறது. அவ்வாறு உயர்த்தினால் வேகன் பற்றாக்குறையும் தீரும்.

இவ்வாறு டி. ஏ. பாய் கூறினர்.

ரூ. 15.16 கோடிக்கான மானிய கோரிக்கை ஓட்டுக்கு விடப்பட்டு நிறைவேற்றப்பட்டது.

## மே.வங்கத்தில் காளி..

2-ம் பக்கத் தொடர்ச்சி

டில் வசிக்கும் நிலப்பிரபுவிடம் 19 நிமிடங்களுக்குள் எங்களுக்கு ரூ501 வேண்டும் என்று மிரட்டினர்.

நிலப்பிரபு இந்த இரவு நேரத்தில் இவ்வளவு பெருந் தொகையை தன்னால் தர இயலாது என்று வாதாடிக் கொண்டிருந்தார். உடனே ஆத்திரமடைந்த குண்டர் கும்பல் துப்பாக்கியால் சுட்டது.

இந்தத்துப்பாக்கிச் சத்தத்தால் கவரப்பட்ட தந்தியில்லாக் கம்பி பொருத்தப்பட்ட போலீஸ் லாரியொன்று உடனே நிலப்பிரபுவின் வீட்டிற்கு விரைந்து நாலு பேரைப் பிடித்தது.

சாதாரண ஏழை, எளிய மக்களிடமும், சிறு வியாபாரிகளிடமும் இவ்வாறு பலவந்தமாக பணம் பறிக்கப்பட்ட சம்பவங்கள் ஆயிரக் கணக்கில் இருந்தாலும் அவர்களின்மீது எங்களால் நடவடிக்கை எடுக்க முடியவில்லை என்று மேற்கு வங்க உள்துறை இலாகாவின் பெரிய அதிகாரி ஒருவர் கூறினர். இந்த ரௌடிக் கும்பல்கள் காங்கிரஸ் கட்சியிலுள்ள ஏதாவதொரு கோஷ்டித் தலைவரின் ஆதரவைப் பெற்றிருக்கின்றன.

### காங்கிரஸ் தலைவரின் தொடர்

உதாரணமாக கல்கத்தாவின் தென்பகுதியில் உள்ள ஜாதவ்பூரில் பலவந்தமாக நன்கொடை வசூலித்ததாக ஏராளமான வழக்குகள் பதிவு செய்யப்பட்டன.

ஆனால் இந்தக் குண்டர்கள் போலீசாரால் கைது செய்யப்பட்ட மறு நிமிடமே கைது செய்த போலீஸ் அதிகாரிக்கு ஒரு 'மெமோ' வருகிறது. இளைஞர் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களை ஏன் கைது செய்தீர்கள் என்று தகுந்த விளக்கம் கூற வேண்டும் என்று போலீஸ் அதிகாரிக்கு உத்தரவுவருகிறது. அதோடு மட்டுமல்லாமல் கைதுசெய்யப்பட்ட ரௌடிகளும் உடனே விடுதலை செய்யப்படுகின்றனர் என்று அந்த உயர்போலீஸ் அதிகாரி தங்களின் அவல நிலையை எடுத்துரைத்தார்.

ஒரு சின்ன படக்கடைக்காரிடம் துர்க்கை பூஜை என்ற பெயரில் 19 கோஷ்டிகள் ரூ. 329 வசூல் செய்திருக்கின்றன. அதுமட்டுமா, காளி பூஜை என்ற பெயரில் வேறு 27 கோஷ்டிகள் ரூ 200-ஐ அந்த படக்கடைக்காரரிடமே வசூல் செய்துள்ளன. தனது சிறிய படக்கடையின்மூலம் இந்த 529 ரூபையை எப்படி சம்பாதிக்கப் போகிறேமோ என்று வகையறியாமல் விழித்துக்கொண்டிருக்கிறார் அந்த படக்கடைக்காரர்.

### பெண்ணுக்கு நேர்ந்த கதி

ஜகத்தாலில் உள்ள பொதுமக்களிடம் ஒரு ரூபாயிலிருந்து ரூ 500 வரை வசூல் செய்துள்ளனர். பெலஹாரியாவில் அச்சிட்ட ரசீதுகளில்ரூபாய் இருபது வரை வசூல செய்துள்ளனர். இதற்கு மேலுள்ள தொகையை எப்படி, எந்த இடத்தில், எப்போது யாரிடத்தில் அளிக்க வேண்டுமென்று குண்டர்கள் உத்தரவிட்டுள்ளனர். இதைப்பற்றி நன்கொடை யளிப்பவர்கள் வெளியே சொன்னால் உங்கள் உயிருக்கேஆபத்து என்று எச்சரித்துள்ளனர். டம்டம்மில் காளி பூஜையை நடத்திய காங்கிரஸ் குண்டர்கள் ஒரு பெண்மணியிடம் ரூ. 101 அளிக்க வேண்டும் என்று வற்புறுத்தியுள்ளனர். அவர் தன்னுடைய இயலாமையைத் தெரிவித்த போது, ரூ. 101ஐ தராவிடில் கீதாசட்டர்ஜிக்கி நேர்ந்த கதிதான் உனக்கும் நேரும் என்று எச்சரித்துள்ளனர்.

(கீதா சட்டர்ஜி என்ற பெண்மணியை அவரது கணவனின் கண் முன்பாகவே கொலை வெறி பிடித்த காங்கிரஸ் குண்டர்கள் கற்பழித்து விட்டு, அவரது கணவனையும் துண்டு துண்டாக வெட்டிப் போட்ட நெஞ்சை உருக்கும் சம்பவம்)

### காங்கிரஸ் குண்டர்களிடம் சிக்கிய காங்கிரஸ்காரர்

பனிஹத்தியில் ஒரு காங்கிரஸ் ஆதரவாளரிடமே காங்கிரஸ் குண்டர்கள் சென்று ரூ. 201 நன்கொடையாகத்தரவேண்டும் என்று வற்புறுத்தினர். அவர் தர மறுத்து போலீசில் புகார் செய்வேன் என்று கூறினர். ஆனால் போலீஸ் எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்காதுஎன்று நன்கு உணர்ந்த காங்கிரஸ் ரௌடிக் கும்பல் அவரின் மீதே பாய்ந்து அவரை காலால் எட்டி உதைத்து மிதித்தனர். முஷ்டியால் குத்தி அவரைக் காயப்படுத்தி உன்னைக் கொன்று விடுவோம் என்று மிரட்டியுள்ளனர். இது காங்கிரஸ் நபருக்கு நேர்ந்த கதி. அப்படியானால் சாதாரண மக்களின் பாடு எப்படி இருந்திருக்கும் என்று கற்பனை செய்துகூட பார்க்கமுடியவில்லை.

## மருத்துவக்கல்லூரி மாணவர் கண்டன ஊர்வலம்

மதுரை, நவ 24—மதுரை மருத்துவக் கல்லூரி மாணவர்கள்போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்து கண்டன ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர்.

போடியில் நடந்த துப்பாக்கிச் சூட்டைக் கண்டித்தும் பாளையங்கோட்டையில் கல்லூரி பேராசிரியர் தாக்கப்பட்டதைக் கண்டித்தும், மாணவர் லூர்துநாதன் மரணத்திற்கு பகிரங்க விசாரணை நடத்தக் கோரியும் செலக்சனமுறையை ரத்து செய்ய கோரியும் கலெக்டர் அலுவலகத்தை நோக்கிச் சென்றனர். அங்கு கலெக்டர் இல்லாததால் ஆர். டி. ஓ.யிடம் கோரிக்கை மகஜரை அளித்தனர்.

ஒரு மாத காலத்திற்கும் மேலாக கல்லூரியை மூடிய நிலையில் செலக்சன் முறை அமுல் நடத்தப்பட்டு 25 மாணவர்கள் நடக்க இருக்கும் டிசம்பர் தேர்வு எழுத அனுமதிக்கப்படவில்லை. இந்தக் கேடு கெட்ட செலக்ஷன் முறையை நீக்கக் கோரியும், எல்லா மாணவர்கட்கும் தேர்வு எழுத அனுமதி கோரியும் ஊர்வலத்தில் முழக்கமிடப்பட்டது.

எந்த மாணவரும்-எந்தக் கல்லூரியிலும் "செலக்ஷன்" முறையில் பாதிக்கப்படக்கூடாது.

மத்திய ரிசர்வ் போலீசே திருப்பிப்போ!

பகிரங்க நீதி விசாரணை வேண்டும்.

மாணவர் ஒற்றுமை ஓங்குக!

போலீஸ் காட்டு மிராண்டி தர்பார் ஒழிக! போன்ற முழக்கங்களை ஊர்வலத்தில் மாணவர்கள் முழங்கிச் சென்றனர்.

ஊர்வல முடிவில் இறந்த மாணவருக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

செலக்ஷன் பற்றி முதலமைச்சருக்கு தந்திகள் அனுப்பப்பட்டுள்ளன.

### போலீஸ் இல்லை அமைதியாக நடந்தது

இந்த ஊர்வலம் மிக அமைதியுடனும், கட்டுப்பாடாகவும் நடைபெற்றது. மருத்துவக் கல்லூரி மாணவர்கள் நடத்திய இந்த ஊர்வலகத்திற்கு பாதுகாப்பாக ஒரு போலீஸ் கூட வரவில்லை. இதனால்தான் ஊர்வலம் மிக அமைதியாக நடந்தது என்று மக்கள் பரவலாக பேசிக்கொண்டனர்.

## பசானி தலைமையில் 5 கட்சி கூட்டணி

டாக்கா, நவ. 24—பங்களாதேஷ் மக்களின் மதிப்புமிக்க தலைவர் மௌலானா பசானி தலைமையில் ஐந்து கட்சிகளின்கூட்டணி ஒன்று அமைக்கப்பட்டது

ஐந்து கட்சிகளின் கூட்டுக் கூட்டம் கடந்த திங்களன்று நடந்தது. தேசிய அவாமி கட்சியின் அமைப்புத் தலைவரான பரத்யூசன் சக்ரவர்த்தி தலைமைவகித்தார்.

இந்தக் கூட்டத்தில் மௌலானாபசானி தலைமையிலான தேசிய அவாமி கட்சி அடார் ரகுமான்கான் தலைமையிலான ஜதியாலீக், சராமிக் கிருஷக் சமஜ்வாதி தாளம், பங்களாதேஷ் கம்யூனிஸ்ட் கட்சி (லெனினிஸ்ட்) பங்களா கம்யூனிஸ்ட் கட்சி ஆகிய ஐந்து கட்சிகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

இந்த ஐந்து கட்சிகளின் கூட்டுச் செயல் குழு வரும் புதன் கிழமையன்று கூடும். அக்கூட்டத்தில் தனது திட்டத்தை அக்குழு தயாரித்து வெளியிடும்.

## அரியானாவில் மாணவர்களிடம் ரூ. 44 லட்சம் மோசடி

புதுடில்லி. நவ, 23—குருகோவிந்த் மருத்துவக் கல்லூரி மோசடி பற்றி இன்று காங்கிரஸ் நாடாளுமன்ற கட்சிக் கூட்டத்திலேயே பல உறுப்பினர்கள் புகார் கூறினர்.

இந்தக் கல்லூரி நரிதாபாத என்ற இடத்தில் துவங்கப்பட்டது. இதில் சேருவதற்கு மாணவர்களிடம் நபர் ஒன்றுக்கு ரூ. 20 ஆயிரம் வீதம் சேர்க்கைக் கட்டணம் வசூலிக்கப்பட்டது. இப்படி 220 மாணவர்களிடம் மொத்தம ரூ. 44 லட்சம் வசூலிக்கப்பட்டது.

பல பிரபலமான சீக்கியத் தலைவர்களும், கல்வியாளர்களும் இந்தக் கல்லூரி நிர்வாகத்தில் பங்குகொண்டிருப்பதாகப் பத்திரிகைகளில் விளம்பரம் வந்திருப்பதைப் பார்த்து சிங்கப்பூரிலிருந்தும் மலேசியாவிலிருந்தும் பல இந்திய மாணவர்கள் வந்து இதில் சேர்ந்தனர்.

இவர்களிடம் பணம் வசூலித்த பின்னர் கல்லூரி மூடப்பட்டுவிட்டது.

இந்தக் கல்லூரி எந்தப் பல்கலைக்கழகத்துடனும் இணைக்கப்படவுமில்லை. இதற்குக் கட்டடமும் கிடையாது. பல்கலைக் கழகத்தின் அனுமதி பெறுமலே இது துவங்கப்பட்டது. இதில் ஒரு பேராசிரியரும், இரு லெக்சரர்களுமே உள்ளனர்.

மாணவர்களை ஏமாற்றுவதற்கே இந்தக் கல்லூரி திறக்கப்பட்டிருந்தும் போலீஸ் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. அரசாங்கமும் இந்த மோசடி நடைபெறுவதைத் தடுக்கவில்லை.

இந்த ஊழலைப்பற்றி அரியானாவெங்கும் பேசப்படுகிறது.

இந்த நிலைமையில் காங்கிரஸ் நாடாளுமன்ற கட்சிக் கூட்டத்திலேயே உறுப்பினர்கள் கேள்விகேட்ட போது மத்திய சுகாதார அமைச்சர் உமா சங்கர் தீக்சித் இதுபற்றி அரியானா அரசுடன் மத்திய அரசு தொடர்புகொள்ளும் என்று அறிவித்தார்.

இந்தப் பதில் உறுப்பினர்களுக்குத் திருப்தி யளிக்காமல் மத்திய அரசு தலையிட வேண்டும் என்று கோரினர்.

இந்நிலையில் குறுக்கிட்டு சுருக்கமாகப் பேசிய பிரதமர் இந்திரா முறைபடி விசாரணை நடத்தி குற்றவாளிகள் தண்டிக்கப்படவேண்டியது அவசியமே என்று கூறினர்.

## மதுரை நகரில்...

1-ம் பக்கத் தொடர்ச்சி

தாக்கப்பட்டதைக் கண்டித்தும், அது குறித்து நீதி விசாரணை நடத்தக் கோரியும் இன்று மதுரையில் ஊர்வலம் நடத்த மதுரை பல்கலைக்கழக ஆசிரியர்கள் முடிவு செய்திருந்தனர். அதன்படி இன்று மாலையில் கல்லூரி ஆசிரியர்களும்,பேராசிரியர்களும் மாக 300 க்கு மேற்பட்டவர் மதுரைக்கல்லூரியில் ஒன்று திரண்டனர்.

ஆனால் நகரில் மாணவர் ஆர்ப்பாட்டத்தின் காரணமாக நிலவும் பதட்டநிலை காரணமாக ஊர்வலம் தள்ளிவைக்கப்படுவதாக அறிவித்தனர்.

## நடக்க இருப்பவை

### மதுரையில் பொதுக்கூட்டம்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின், தமிழ் மாநிலக் குழுச் செயலாளர்

தோழர்

**ஏ. பாலசுப்ரமணியம்**

பேசுகிறார்

நாள்: 26—11—72ஞாயிறு மாலை 7 மணி

இடம்: **ஜான்சிராணி திடல்**

பொருள்: தி, மு, க. பிளவும், வலது கம்யூனிஸ்ட் கட்சியின்பச்சோந்தி தனமும்

∴ ∴ ∴

### நாகர்கோவிலில்

தோழர்

**ராமமூர்த்தி**

பேசுகிறார்

நாள் டிச. 1 வெள்ளி மாலை 7மணி

இடம்: **நகர் மன்ற திடல்**

∴ ∴ ∴

ஜி.க;, தா.க. உறுப்பினர்கள் கிளைச் செயலாளர்கள் கூட்டம்

**தக்கலை பாப்புலர் டியூடோரியலில்**

நவ. 26 ஞாயிறு காலை 10 மணிக்கு நடைபெறும்.

## மத்திய ஆட்சியின் போக்கால் ரூ.4 கோடி நட்டம்

புதுடெல்லி. நவ. 24—முல்கி விதிகளை எதிர்த்து நடக்கும் கிளர்ச்சியால் ஆந்திரப் பிரதேச எல்லை வழியாக ஓடும் எல்லா ரயில்களும் ரத்து செய்யப்பட்ட காரணத்தால், இதுவரையில் ஏற்பட்ட நஷ்டம் 4 கோடி என்று ரயில்வே மந்திரி டி. ஏ. பாய் நாடாளுமன்ற மக்கள்சபையில் அறிவித்தார்.

ரூ 40 லட்சம் பெறுமான ரெயில்வே சொத்துக்களும். ரூ 10 லட்சம் பெறுமானமுள்ள பார்சல்களும் நாசம் செய்யப்பட்டன,

இந்தக் கிளர்ச்சியில் மத்திய ஆட்சி ஒரு முறையான தீர்வுக்கு வராததின் காரணமாக இந்த கடுமையான சேதம் ஏற்பட்டது.

## துப்பாக்கிச் சூட்டில் காயமடைந்த போலீஸ் ஏட்டு மரணம்

பாளையங்கோட்டை, நவ. 25—பாளையங்கோட்டையில் நவ. 23-ல் போலீசார் நடத்திய துப்பாக்கிச் சூட்டில் படுகாயமடைந்த போலீஸ் ஏட்டு சங்கரபாண்டியன் நேற்று காலையில் இறந்து போனார்.

33 வருடமாக போலீஸ் வேலை பார்த்து வரும் இவர் முறப்பநாடு அருகேயுள்ள கன்னவெட்டியைச் சேர்ந்தவர்.



(3-ம் பக்கத் தொடர்ச்சி)

இவர் யார் என்னை கணக்கு கேட்க? கருணாநிதியைக் கணக்கு கேட்பவர்களுக்கு கட்சியிலேயே இடமில்லை. அண்ணா நிதி சேர்க்க கருணாநிதியை நியமித்தார். அவர் 11 லட்சம் சேர்த்துக் கொடுத்தார். கருணாநிதியைப்போல் நாணயமானவர் யாருமில்லை.

—அலை ஓசை 22—11—72

## கணக்கு கேட்டவர்களே உங்கள் கணக்கு என்ன? ஈ. வெ. ரா. கேள்வி

சென்னை அயனாவரம் பொதுக்கூட்டத்தில் தி. க, தலைவர் ஈ. வெ. ரா. பேசுகையில் :

"இந்தியப் பிரதமர் அம்மா இந்திரா அவர்கள், நடந்து முடிந்த தேர்தலுக்காக ரூ. 60, 70 கோடிக்கு மேல் செலவு செய்து இருக்கின்றாரே, மாகாணத்திற்கு 5 கோடி 6 கோடி என்று செலவு செய்துதானே 15 மாகாணங்களில் தேர்தலில் வெற்றி பெற்று இருக்கிறார். இதற்கெல்லாம் இந்திரா காந்தி கணக்கு கொடுப்பாரா? எவராவது அவரை கணக்கு கொடுக்கின்றாயா, இல்லை, வெளியேபோய் மிரட்டுவேன் என்றுகூற முடியுமா ?

டாட்டா, பிர்லா, போன்ற பெரும் பணக்காரர்களை பணம் கேட்கின்றனா. அவர்கள் 20 கோடி, 50 கோடி என்று கள்ளப்பணம்வைத்திருப்பதில், 4 கோடி 5 கோடி கொடுத்திருப்பார்கள. கொடுக்கவில்லையென்றால், 100 ரூபாய் நோட்டுகள் செல்லாது என்று ஒரு உத்தரவில் பணத்துக்கு ஆபத்து ஏற்படுத்தி விடுவாரே!

பணக்காரர்கள் பணத்தை 100 ரூபாய் நோட்டாகத்தானே மாற்றி பதுக்கி வைத்திருக்கிறார்கள். "தி. மு. க. மந்திரிகள், சட்டசபை மெம்பர்கள் முதலியவர்கள் ஊழல் செய்கிறார்கள். இவர்கள் ஒழியவேண்டும்"—என்று கூறுகிற எம். ஜி. ஆர். இதில் இருந்து 9 பேர்களை இழுத்துக் கொண்டு உள்ளாரே? அவர்கள் மட்டும் ஊழல் அற்றவர்களா? அவர்கள் கணக்கை அவர் கேட்டாரா?"—என்று கேட்டார்.

மதுரை தினத்தந்தி 23—11—72

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (-13 முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே. முத்தையா,